# இந்தியாவில் தேசீய இனங்களின் விடுதலை

இந்தியா பல்வேறு தேசிய இனங்களின் சிறைக்கூடமாக விளங்குகிறது. இந்திய அரசு பெரும்பான்மை மக்களான விவசாயிகளையும், தொழிலாளர்களையும் சுரண்டி அடக்கி ஒடுக்கி வருவது போலவே, பல்வேறு தேசிய இனங்களையும் சுரண்டி அடக்கி ஒடுக்கி வருகிறது. இந்தி தரகு முதலாளித்துவ நிலபிரபுத்துவ வர்க்கங்களை மையமாகக் கொண்ட இந்திய ஆளும் வர்க்கங்கள் தங்கள் எஜமானர்களான ரஷ்ய, அமெரிக்க ஏகாதிபத்தியங்களின் நலனுக்காகவும், தங்கள் நலனுக்காகவும் பல்வேறு தேசிய இனங்களை ஒடுக்குகின்றது.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் நேரடி ஆட்சிக் காலத்திலேயே நாகா, காஷ்மீர், தமிழ், பஞ்சாபி தேசிய இனங்கள் விடுதலைக் குரல் ஒலித்தன. இந்திய ஆளும் வர்க்கங்களின் கையில் ஆட்சியதிகாரம் மாறியதிலிருந்து (1947) நாகா மக்கள் விடுதலை கோரி 35 ஆண்டுகளுக்கும் மேலாக ஆயுதமேந்தி போரிட்டு வருகின்றனர். 1960களின் மத்தியிலிருந்து மிஜோ, மணிபுரி மக்கள் தொடர்ந்து விடுதலைக்காக ஆயுதப் போராட்டம் நடத்தி வருகின்றனர். காஷ்மீர் பிரச்சினை 1947லிருந்து தீர்க்கப்படாத ஒரு பிரச்சினையாக இன்னும் இருந்து வருகிறது. குறிப்பாக 1970களின் இறுதியிலிருந்து இந்தியாவில் தேசிய இனங்களின் விடுதலை உணர்வுகளும் போராட்டங்களும் பரவலாகவும், ஆழமாகவும் அதிகரித்திருக்கின்றன. திரிபுரா, அசாம், பஞ்சாப் மக்களின் போராட்டங்கள் வடக்கு, வடகிழக்கு இந்தியாவில் ஒரு பெரிய போராட்ட வீச்சையே தோற்றுவித்திருக்கின்றது. தமிழ் தேசிய விடுதலை வேட்கை தமிழ் தரகு முதலாளித்துவ நிலப் பிரபுத்துவ கும்பல்களால் நீண்டகாலமாக மழுங்கடிக்கப்பட்டு இருப்பினும் அண்மையில் நடந்த "இலங்கை தமிழர் படுகொலை" தமிழ் தேசிய இனமக்கள் மத்தியில் விடுதலை உணர்வை மீண்டும் வலுவாகத் தட்டிக் கிளப்பியுள்ளது. ஆந்திரர், கர்நாடக

மக்கள் மத்தியிலும் தேசிய எழுச்சிகள் தலைதூக்க ஆரம்பித்திருக்கின்றன. இவையன்றியும் ஜார்கண்ட், சதீஷ்கர், விதர்பா போன்ற பிராந்திய விடுதலைப் போராட்டங்களும் நடந்து வருகின்றன.

இந்திய சமூகத்தின் வளர்ச்சிக்கு, மக்கள் நலனுக்குத் தடங்கலாய் இருக்கின்ற இந்திய ஆளும் வர்க்கங்களையும், அவர்களது அரசையும் தூக்கி எறிந்துவிட்டு ஒரு மக்கள் ஜனநாயக அரசை ஏற்படுத்த விரும்பும் முற்போக்குச் சிந்தனையாளர்கள் அனைவரும் தேசிய இனப் பிரச்சினை பற்றி இதுவரை கொண்டிருந்த கருத்துக்களை, புறநிலை யதார்த்தத்தில் நடக்கும் சமூகப் போராட்டங்களின் வெளிச்சத்தில் திரும்பவும் மறு பரிசீலனை செய்ய வேண்டி நிர்பந்திக்கப் பட்டுள்ளோம். தேசிய இன விடுதலைப் போராட்டங்கள் எதிரியைத் தூக்கியெறிய எந்தளவிற்குப் பங்களிக்கும் என்பது பற்றியும், பாட்டாளி வர்க்க இயக்கம் இந்தியாவில் தேசிய இனவிடுதலை போராட்டங்களை எவ்வாறு அணுகுவது என்பது பற்றியும் பார்ப்போம்.

## ஆங்கிலேயர் வருகையும் இன்றைய இந்தியாவின் தோற்றமும்

வரலாற்றில் எப்பொழுதுமே தற்பொழுது இருப்பது போன்ற ஒரு ஒன்றுபட்ட இந்தியா என்பதே இருந்ததில்லை. குறிப்பிட்ட சில வரலாற்றுக் காலங்கள் தவிர பரந்த பேரரசு என்பது கூட இல்லை. நீண்டகாலமாகவே பல்வேறு நிலபிரபுத்துவ சிற்றரசுகளாக நூற்றுக்கணக்கான சிறுசிறு நாடுகளாக சிதறுண்டிருந்தன. கி.பி. 18, 19ம் நூற்றாண்டில் பிரிட்டீஷார் அடிமைப்படுத்தும்போது இந்திய சமூகம் சிதறுண்ட நிலையில்தான் இருந்தது. ஆங்கிலேயர் ஏறக்குறைய நூறாண்டுகளுக்கும் மேலாக (கி.பி. 1757 – 1849) யுத்தம் செய்துதான் பல்வேறு பகுதிகளையும் தங்கள் சுரண்டல் நலனுக்காக ஒரே அரசு நிர்வாகத்தின் கீழ் ஒருங்கிணைத்தனர். அப்போதும் கூட இந்தியா முழுமையையும் ஒரே அரசு நிர்வாகத்தின் கீழ் கொண்டு வந்ததில்லை. பிரிட்டீஷாரின் நேரடி ஆளுகைக்குட்படாத 'சமஸ்தான இந்தியா' என்ற பெயரில் தங்களுடைய கட்டுப்பாட்டில் இருக்கின்ற பொம்மை நிலபிரபுத்துவ

அரசுகள் மூலமே அடிமைப்படுத்தி வைத்திருந்தனர். பிரிட்டன் ஏகாதிபத்தியம் இந்திய ஆளும் வர்க்கங்களின் கையில் அரசியல் அதிகாரத்தை ஒப்படைத்த பின்னர்தான், இவர்களால் 7,12,000 சதுர மைல் பரப்பளவு கொண்ட 563 சமஸ்தானங்களும் பலாத்காரமாக ஒருங்கிணைக்கப்பட்டன. இந்தியாவில் உள்ள பல்வேறு தேசீய இன மக்களும் தங்கள் தங்கள் சுய விருப்பத்தின் அடிப்படையில் இணைந்து ஏற்படுத்திக் கொண்ட, ஒவ்வொரு தேசீய இனத்திற்கும் அரசியல் சுதந்திரத்துடன் கூடிய ஒரு கூட்டாட்சி அல்ல இன்றுள்ள இந்தியா. பிரிட்டன் ஏகாதிபத்தியவாதிகள் இந்திய மக்களைச் சுரண்ட, துப்பாக்கி முனையில் மக்களின் உணர்வுகளுக்கு எதிராக, அவர்களால் முதலில் ஒருங்கிணைக்கப்பட்டது. பின்னர் பிரிட்டன் ஏகாதிபத்திய வாதிகளின் ஏஜெண்டுகளாகவும், நாளடைவில் அமெரிக்க ஏகாதிபத்தியம், ருஷ்ய சமூக ஏகாதிபத்தியங்களின் ஏஜெண்டுகளாகவும் இருந்து வருகின்ற இந்திய தரகு முதலாளித்துவ நிலபிரபுத்துவ வர்க்கங்களின் அரசால் அவர்களின் நலன்களுக்காக துப்பாக்கி முனையின்கீழ் இந்திய ஒருமைப்பாடு கட்டிக் காக்கப்படுகிறது.

நிலபிரபுத்துவம் இற்றுவிழும் தருவாயில் இருந்த இந்தியச் சமூகம் இயல்பாக தொழில் வளர்ச்சி பெற்று முதலாளித்துவ சமூகமாக தேசிய அரசுகளாக உருவாவது இங்கே நிகழவில்லை. ஒவ்வொரு தேசிய இனமும் இயல்பாக வளர்ந்து ஒவ்வொரு தேசமாக உருமாறும் போக்கு இங்கே நிகழவில்லை. நிலபிரபுத்துவம் இற்றுவிழும் தருவாயில்தான் வியாபாரத்திற்காக வந்த ஆங்கிலேயர்கள் இந்தியாவை அடிமைப்படுத்தி விட்டதால் இந்திய சமுதாயத்தின் இயல்பான வளர்ச்சி தடைப்படுத்தப் பட்டது. தேசிய இனங்களின் வளர்ச்சியும் தடைப்பட்டது. இந்தியா போன்ற காலனி நாடுகளில் அடித்த கொள்ளையில் இருந்து பிரிட்டனின் தொழில்துறை வளர்ச்சியடைந்தது. பிரிட்டனின் வணிக மூலதனம் தொழில் மூலதனமாக வளர்ச்சி பெற்றது. அவர்களின் தொழில் உற்பத்திப் பொருட்களை விற்கும் சந்தையாக இந்தியாவை மாற்றியமைக்க இந்தியாவின் சுதேசித் தொழில்களை, உலகிலேயே பண்டைய நாளில் சிறப்பாக வளர்ச்சி பெற்ற

பருத்தி துணி தொழில் போன்றவற்றைத் திட்டமிட்டே அழித்தனர். அன்றியும் பிரிட்டனின் தொழில் உற்பத்திக்குத் தேவையான மூலப் பொருட்களைக் குறைந்த செலவில் உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்ய இந்திய விவசாயம் திருத்தியமைக்கப்பட்டது. நீண்ட காலமாக கிராமங்களில் பொதுவில் இருந்த நில உறவுகள் திருத்தியமைக்கப்பெற்று தங்களைச் சார்ந்து நிற்கும் நிலபிரபுகளுக்கு நிலங்கள் வழங்கப்பட்டன. இந்தியாவின் ஏற்றுமதி, இறக்குமதி வணிகத்தில் நாட்டுப் பற்று கொஞ்சமும் இல்லாத பெரு வணிகர்களைக் கூட்டு சேர்த்துக் கொண்டனர். நாளடைவில் இத்தரகு வணிகர்கள் ஆங்கிலேயர்களோடு கூட்டாகவும் தனியாகவும் தொழில் தொடங்கி பெருமுதலாளிகள் ஆயினர். பிரிட்டன் இந்தியாவை 200 ஆண்டுகளுக்கும் மேலாக அடிமைப்படுத்தி வைத்திருக்க அவர்களோடு கூடி நின்ற இந்திய பெரு நிலபிரபுக்கள் பெருவணிம முதலாளிகள் ஆகியோர் துணையாக நின்றனர்.

பிரிட்டனின் தொழில் வளர்ச்சிக்கேற்ற சந்தையாகவும், விவசாய பின்னிலமாகவும் இந்தியா மாற்றியமைக்கப் பட்டதால், ஏற்றுமதி இறக்குமதி வியாபாரம் சென்னை, பம்பாய், கல்கத்தா போன்ற துறைமுகப் பகுதிகளை சார்ந்து நடந்ததால் இந்தியாவின் உள்பகுதிகளோடு ரயில்சாலை போக்குவரத்து இணைக்கப்பட்டதால் துறைமுகப் பகுதிகளையொட்டி வளர்ச்சியும் பிறபகுதிகளில் தேக்கநிலையும் இயல்பாக ஏற்பட்டது. எனவே, வளர்ச்சி பெற்ற பகுதிகளை ஒட்டியிருந்த தேசிய இனங்கள் ஓரளவு வளர்ச்சி பெறுகின்றன. உள் பகுதிகளில் இருந்த தேசிய இனங்களின் வளர்ச்சி அருகியும் சிற்சில பகுதிகளில் வளர்ச்சியே அற்றும் இருந்தன. அன்றியும் 'சமஸ்தான இந்தியா' 'பிரிட்டீஷ் இந்தியா' என்ற பிரிவினையும் பிரிட்டீஷ் இந்திய மாகாணங்கள் ஒவ்வொன்றிலும் பல்வேறு மொழி பேசும் மக்கள் பிரித்து பிரித்து இணைக்கப் பட்டிருந்ததாலும் ஒருமொழி பேசும் மக்களுக்குள்ளேயே, ஒரு தேசிய இனத்திற்குள்ளேயே ஏற்றத்தாழ்வான வளர்ச்சி என்ற அடிப்படைத் தன்மை கொண்டே நடத்த ஆங்கிலம் இங்கே புகுத்தப்பட்டது. இதனால் இந்தியாவின் எல்லா மொழிகளும், இந்தி மொழி உட்பட புறக்கணிக்கப் படுகின்றன. மேலை நாடுகளின் கலாச்சார வளர்ச்சியும்

பின்னுக்குத் தள்ளப்படுகிறது. இந்நிலைமைகளில் பிரிட்டன் ஏகாதிபத்தியத்தை நாட்டை விட்டு விரட்டுவதும், இந்தியாவை விடுதலை செய்வதும் இந்திய மக்களின் பிரதான கடமையாக முன்வருகிறது.

## தேச விடுதலைப் போராட்டமும் இந்திய ஒற்றுமை உணர்வும் தேசிய இன உணர்வுகளும்

பிரிட்டனின் ஆதிக்கத்தை எதிர்த்து ஆரம்பத்திலிருந்தே நூற்றைம்பது ஆண்டுகளுக்கும் மேலாகப் போராடியவர்கள் இந்திய கிராமப்புற விவசாயிகள்தான். பிரிட்டீஷாருக்கு ஆதரவாக இருந்த பெரு நிலப்பிரபுகளையும், பெரு வணிகர்களையும் எதிர்த்துப் போராடியவர்கள் இவ்விவசாயிகள்தான். இந்திய விவசாயிகளின் வீரஞ்செறிந்த போராட்டங்களுக்கு ஆதரவாக இநன்று அந்நிய நாட்டினரை எதிர்ப்பதற்கு பதில் அந்நியர்களோடு சேர்ந்து கொண்டு இந்திய மக்களின் விடுதலைப் போராட்டங்களை எதிர்த்தவர்கள் நிலபிரபுகளும், தரகு வணிகர்களுமேயாவர். 1856ல் நடந்த சாந்தலர் பழங்குடி மக்களின் வெள்ளையர் எதிர்ப்பு போராட்டம் தோல்வியுற்றமைக்கு நிலபிரபுக்களும் தரகு வணிகர்களும் வெள்ளையர்களோடு சேர்ந்து கொண்டது ஒரு முக்கிய காரணமாகும்.

மேற்கத்திய முதலாளித்துவ பண்டப் பரிவர்த்தனைக்குள் இந்தியா நெருக்கமாகப் பிணைக்கப் பட்டதால், ரயில் சாலை போன்ற போக்குவரத்துகளும், செய்தித் தொடர்புகளும் மேலைய கல்வி முறையும் சிதறுண்டு கிடந்த இந்தியாவை ஒன்றுபடுத்துவதில் ஒரு முக்கிய பாத்திரத்தை வகிக்கின்றது. அன்றியும் இந்திய மக்களும் அந்தந்தப் பகுதிகளில் தனித்தனியே போராடிய போராட்ட அனுபவங்களிலிருந்த ஒன்றுபட்டு போராடுவதின் அவசியத்தை நாளடைவில் உணர்ந்தது இந்திய மக்கள் ஒன்றுபடுவதற்கு காரணமாகிறது. 1857ன் சிப்பாய்க் கலகம் இந்திய மக்களின் ஒன்றுபட்ட போராட்டதிற்கு முன்னோடியாகத் திகழ்கிறது. மேற்கத்தியரின் வருகையால் அச்சு எந்திரம் வந்தது இந்தியாவில் பல்வேறு மொழிகளும், அவற்றின் இலக்கியங்களும் வளர பெரும் காரணியாய் அமைந்தது.

கிறித்தவ மத பிரச்சாரத்திற்குப் பல்வேறு பிராந்திய மொழிகளில் உரைநடை வடிவங்கள் புகுத்தப்படுகின்றன. மேலைய கலாச்சாரத்திற்கு எதிராக இந்திய மக்களின் கலாச்சாரமும் புத்தெழுச்சி பெறுகிறது. 19ம் நூற்றாண்டின் கால் பகுதிகளில் செய்தித்தாள்களும், வார, மாதப் பத்திரிக்கைகளும் கல்கத்தா, பம்பாய், சென்னை போன்ற பகுதிகளில் வெளிவரத் தொடங்குகின்றன. அந்நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் பல்வேறு மொழிகளில் இலக்கியப் பத்திரிகைகள் வெளிவர ஆரம்பிக்கின்றன. இந்த வளர்ச்சிப் போக்குகள் ஒரு மொழி பேசுகின்ற மக்களிடம் தேசிய உணர்வுகள் வளர தூண்டுகோலாக அமைகின்றன.

1905இல் கர்சன் வங்காளத்தைப் பிரித்தது இந்துக்களையும் முஸ்லீம்களையும் வேறுபடுத்தவே. ஆனால் அது பரவலாக இந்தியா முழுமையையும் பிரிட்டனை எதிர்ப்பதில் ஒன்றுபடுத்தும் நிலைமையை ஏற்படுத்திற்கு. இந்தியா என்ற ஒருமைப்பாட்டு உணர்விற்கு அடிகோலியது. இதோடு கூடவே ஒவ்வொரு மொழி பேசும் மக்களிடையேயும் மொழி பண்பாடு அடிப்படையில் ஒரு ஒற்றுமை உணர்வை வளர்த்தது. ஒரு மொழி பேசும் மக்களை ஒரே மாகணத்துக்குள் கொண்டு வர வேண்டும் என்ற கோரிக்கையை வைக்க உந்துதல் கொடுத்தது. 1911இல் தெலுங்கு மொழி பேசும் மக்களை ஒரு மாகாணமாக ஆக்க வேண்டும் என ஆந்திரர் கோரிக்கை விடுத்தனர். பிறமொழி மக்களும் நாளடைவில் இக்கோரிக்கையை வைக்கலாயினர். 1918க்கும் 1922க்கும் இடையில் மொழிவழி மாகாணக் கோரிக்கை பிரிட்டன் ஏகாதிபத்தியத்தை எதிர்ப்பதில் பெரும் பங்கு வகித்தது. இதன் விளைவாகத்தான் காங்கிரஸ் கட்சியினரும் மொழிவழி அடிப்படையில் அரசியல் கட்சி வேலைகளைத் திருத்தியமைத்துக் கொண்டனர். அதற்கு முன்பு ஆங்கிலத்தைப் பயன்படுத்தியவர்கள் பின்னர் பிராந்திய மொழிகளில் தங்கள் நடைமுறைகள் உருவாக்கிக் கொண்டனர். 1930களின் இறுதியில் ஒவ்வொரு தேசிய இன மக்கள் மத்தியிலும் இக்கோரிக்கை வலுக்கிறது. காங்கிரஸ் கட்சியினர் இக்கோரிக்கைக்கு இப்போது அழுத்தம் கொடுக்கத் தேவையில்லை, விடுதலைக்குப் பின்னர் கவனிப்போம் என்றனர். இதோடு நின்று விடாமல் தேசிய

உணர்வுகளைத் தணிக்க 1942இல் “விடுதலைக்குப் பின்னர் எந்த ஒரு மொழி பேசும் மக்களையும் வலுக்கட்டாயமாக இந்திய யூனியனோடு சேர்க்க மாட்டோம். விருப்பப் பட்டால் தனியாகப் பிரிந்து செல்லலாம்” என்று உத்தரவாதம் அளித்தனர். ஆக, பிரிட்டனை எதிர்த்து இந்திய மக்கள் போராடும் போது ஒன்றுபட்டும் இன்னொரு புறம் தங்கள் சொந்த தேசியப் பண்புகளைக் காப்பாற்றிக் கொள்வதற்குமாகப் போராடுகின்றனர். இரண்டு விதமான போராட்டங்களும் ஒன்றையொன்று சார்ந்தும் ஒன்றுக்கொன்று ஆதரவாகவுமே வளர்ந்து வருகின்றன.

ஆனால் அன்றைய சூழ்நிலைகளில் பிரிட்டன் ஏகாதிபத்திய அரசு எல்லாத் தேசிய இனங்களுக்கும் எதிரி, மற்றொன்று தேசிய இன வளர்ச்சி முழுமை பெறவில்லை. இந்நிலைமைகளில் பிரிட்டன் ஏகாதிபத்தியத்தை எதிர்த்த விடுதலைப் போராட்டம் முதன்மை பெறுகிறது.

## இந்திய ஆளும் வர்க்கங்களின் கையில் அரசியல் அதிகார மாற்றமும், உழவர் போராட்டங்கள், தேசிய உரிமைகள் நசுக்கப்படலும்

1852 சிப்பாய்க் கலகத்துக்குப் பின்னர் இந்திய மக்களின் குமுறல் ஒரு புரட்சியை உண்டு பண்ண வழி தேடுகிறது. இதைத் தடுக்க இந்தியப் பிரதிநிதிகளைக் கொண்டே ஒரு அரசியல் கட்சி துவக்கப்பட வேண்டும். இக்கட்சி சீர்திருத்தக் கோரிக்கைகளை முன்வைத்து இந்திய மக்களைத் தன் அணியில் திரட்ட வேண்டும். பிரிட்டன் ஏகாதிபத்தியம் தப்பிக்க ஒரே வழி இதுதான் என்று பிரிட்டன் ஏகாதிபத்தியவாதிகள் முடிவுக்கு வருகின்றனர். இந்தியத் தரகு முதலாளிகளும் நிலப்பிரபுக்களும் 1871ல் பாரீஸ் கம்யூனின் புரட்சி போன்று இந்திய மக்களின் புரட்சி ஒன்று வெடித்தால் பிரிட்டன் ஏகாதிபத்தியவாதிகளோடு தாங்களும் சேர்ந்து தூக்கியெறியப்படுவோம் என்றஞ்சி பிரிட்டிஷாரோடு இணைந்து இந்திய மக்களின் விடுதலைப் போராட்டத்தைத் திசை திருப்ப “காங்கிரஸ்” கட்சியை 1885இல் துவங்குகின்றனர். இதில் பம்பாய், டெல்லி பகுதியில் உள்ள தரகு வணிக முதலாளிகளும், நிலப்பிரபுக்களுமே பிரதான சக்தியாக உள்ளனர். அதாவது இந்திப் பகுதியைச்

சேர்ந்தவர்களே. இவர்கள் பிரதான கோரிக்கை அரசு நிர்வாகத்தில் இந்தியப் பிரதிநிதிகளை (அதாவது தாங்கள் தங்கள் நலனுக்காக அங்கே சென்று பேரம் பேச) சேர்த்துக் கொள்ள வேண்டும் என்பதாகவே இருந்தது. 1906இல் இந்து தரகு முதலாளித்துவ நிலபிரபுத்துவ கும்பலைக் கண்டஞ்சிய முஸ்லீம் சுரண்டல் வர்க்கங்கள் ஏகாதிபத்தியவாதிகளோடு ஒத்துழைக்கவும் சலுகைகள் கோரவும் 'முஸ்லீம் லீக்' கட்சி துவங்குகின்றனர். தென்னிந்தியாவில் தமிழ்த் தரகு முதலாளித்துவ நிலப்பிரபுத்துவ வர்க்கங்கள் தலைமையில் 'தென்னிந்திய நலவுரிமைச் சங்கம்' துவக்கப்படுகிறது 1916இல். இவர்களும் பிரிட்டன் ஏகாதிபத்தியவாதிகளோடு ஒத்துழைக்கவும் சலுகைகள் கோரவுமே செயல்பட்டனர். 1930களின் வாக்கில் பின்னர் கல்கத்தா பகுதி தரகு முதலாளித்துவ நிலபிரபுத்துவ சக்திகள் பார்வார்டு பிளாக் பெயரில் தனிக்கட்சி துவங்குகிறது.

பிரிட்டன் எதிர்ப்புப் போராட்டம் நாளடைவில் வலுப்பதும் குட்டி முதலாளிய படித்த பிரிவினரும், தேசிய முதலாளித்துவ சக்திகளும் காங்கிரசுக்குள் வருகின்றன. 1905 வங்கப் பிரிவினை எதிர்ப்புப் போராட்டம் இச்சக்திகளுக்குத் தூண்டுகோலாய் அமைகின்றன. இதைத் தொடர்ந்து தேசிய முதலாளித்துவ குட்டி முதலாளித்துவ சக்திகள் பிரிட்டனை எதிர்ப்பதில் முன்னணியில் வருகின்றன. மராட்டியத்தில் 'திலகரும்' வங்கத்தில் 'அரவிந்தரும்' தமிழகத்தில் வ.உ.சிதம்பரனாரும் இதன் பிரதிநிதிகள். ஒருபுறம் பிரிட்டன் ஏகாதிபத்தியவாதிகள் கடுமையான அடக்குமுறையை இவர்கள் மீது ஏவி விட்டதும் இன்னொரு புறம் காங்கிரசுக்குள்ளேயே தரகு முதலாளித்துவ நிலபிரபுத்துவ சக்திகள் கடுமையாக எதிர்த்ததும் காரணமாகவே பலவீனமான தேசிய முதலாளித்துவ சக்திகள் அரசியல் அரங்கிலிருந்து துடைத்தெறியப்பட்டது.

1917 அக்டோபர் ரஷ்யப் புரட்சியையடுத்து இந்தியப் பாட்டாளி வர்க்கம் அரசியல் அரங்கில் முன்னுக்கு வருகிறது. கம்யூனிஸ்டுகள்தான் முதன்முதலில் உறுதியாக தெளிவாக இந்தியா சுதந்திரம் அடைய வேண்டும் என்ற கோஷத்தை முன் வைத்தனர். இந்திய விடுதலைப் போராட்டத்தில் இரண்டு சக்திகள் பிரதானமாகப்

பங்கெடுக்கின்றன. ஒன்று பாட்டாளி வர்க்க கம்யூனிஸ்டு கட்சி. இது உண்மையான தேச விடுதலைக்கு நின்றது. இன்றொன்று தரகு முதலாளித்துவ நிலபிரபுத்துவக் கட்சியான காங்கிரஸ். இது உண்மையான தேச விடுதலைக்கு நிற்கவில்லை. ஏகாதிபத்தியவாதிகளிடம் சலுகைகள் கோரவும் இந்திநய மக்களைத் திசை திருப்பி தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கவுமே செயல்பட்டது. பாட்டாளி வர்க்கம் நிலப்பிரபுத்துவ எதிர்ப்புப் போராட்டம் கூடவே நடத்திக் கொண்டு விவசாயிகளைத் தன் பக்கம் வென்றெடுக்காததாலும், தன்னை ஒரு சரியான அரசியல் சக்தியாக ஆக்கிக் கொள்ளாததாலும், ஏகாதிபத்திய ஏஜண்டுகளான இந்தியத் தரகு முதலாளித்துவ நிலபிரபுத்துவக் கும்பலின் காங்கிரஸ் கட்சி இந்திய மக்களின் விடுதலைப் போராட்டத்தில் தலைமைப் பாத்திரத்தை ஏற்கிறது.

உலக யுத்தங்களில் பிரிட்டன் வீழ்ச்சியுற்றதாலும், இந்திய மக்கள் விடுதலைப் போர் உச்சகட்டத்தை நெருங்கி வந்ததாலும், பிரிட்டன் ஏகாதிபத்தியவாதிகளும் அவர்களின் இந்திய ஏஜெண்டுகளும் தங்கள் சுரண்டல் நீடிக்க ‘ஆட்சி மாற்றம்’ என்னும் நாடகம் நடத்தினர் 1947இல். முஸ்லீம் லீக் கட்சியின் ‘பாகிஸ்தான்’ தனிநாடு கோரிக்கையை ஏற்றுக் கொண்ட பிரிட்டன் ஏகாதிபத்தியவாதிகள் தென்னிந்தியாவின் ‘திராவிடநாடு’ கோரிக்கையை மறுத்து ஒப்பீட்டளவில் பெரிய தேசிய இனமான இந்திய இன ஏஜெண்டுகளிடம் பிரிட்டிஷ் இந்தியாவை ஒப்படைக்கின்றனர். ‘சமஸ்தான இந்தியா’ தன் விருப்பப்படி ‘தனித்தோ’ இந்தியா அல்லது பாகிஸ்தான் ஏதாவதொன்றோடு சேர்ந்து கொள்ளவோ செய்யலாம் என்று விட்டுவிடுகின்றனர்.

இச்சமயத்தில்தான் ‘ஐதராபாத் நிஜாம்’ சமஸ்தானத்தில் தெலுங்கானா விவசாயிகள் 3000 கிராமங்களில் நிலப்பிரபுக்களின் நிலங்களைக் கைப்பற்றும் உழவர் புரட்சி நடத்துகின்றனர். சீன நாட்டில் மஞ்சு பேரரசு வீழ்ந்த பின்னர் சீனம் சிறுசிறு நிலப்பிரபுக்கள் கையிலும் ஏகாதிபத்தியங்களின் செல்வாக்குக்கு உட்பட்டனவாகவும் வருகின்றது. ஏகாதிபத்தியங்களுக்குள் போட்டி ஏற்பட்டதால்

அந்தந்த ஏகாதிபத்தியங்களைச் சார்ந்து நிற்கின்ற யுத்த பிரபுக்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டதால் சீனக் கம்யூனிஸ்ட் கட்சி, தோழர் மாவோ தலைமையில் அந்த இடைவெளியில் சிறுபடைகளை வைத்துக் கொண்டு பகுதி பகுதியா விடுவித்து நாளடைவில் சீன தேசம் முழுமையையும் விடுவிக்கிறது. அந்த சீன புரட்சியின் படிப்பினையை இந்திய ஆளும் வர்க்கம் கிரகித்துக் கொண்டு இந்தியா பல அரசுகளின் கீழ் இருந்தால், சிற்றரசுகளின் பலவீனமான அரசுகளுக்குள் இருக்கும் முரண்பாட்டைப் பயன்படுத்தி சிறிய படையை முறியடித்து இந்திய கம்யூனிஸ்டுகள் படிப்படியாக நாடு முழுவதையும் வென்றிடுவர் என்றஞ்சியது. தெலுங்கானா போராட்டம் இதற்கான அறிகுறியாக விளங்கியது. அன்றியும் இந்திய சந்தை முழுமையையும் தரகுப் பெரு முதலாளிகள் தாங்கள் கைப்பற்றவும் இந்திய சமஸ்தானங்களை இந்திய ராணுவத்தின் மூலம் பலாத்காரமாக ஒன்றிணைத்தனர்.

ஐதராபாத் நிஜாம் இந்திய கம்யூனிஸ்டுகளின் தெலுங்கானா போராட்டத்தை அடக்க இயலாத சூழலிலும் இந்தியாவோடு சேர மறுத்து விட்டார். ஐ.நா.விலும் முஸ்லீம் நாடுகளிலும் தன்னுடைய தனிநாட்டு அந்தஸ்தை காக்க வேண்டினார். நேரு, காந்தி, படேல் கும்பல் ஐதராபாத் இந்து நிலப்பிரபுக்களிடம் நிஜாமின் சிறுபடையால் உங்களைக் காக்க இயலாது. இந்தியாவோடு இணைந்தால்தான் இந்தியப் பெரிய படையால்தான் கம்யூனிஸ்டுகளை ஒழிக்க முடியும். எனவே, இந்தியாவோடு இணைவோம் என்று ஐதராபாத் மக்களிடம் பிரச்சாரம் செய்ய வேண்டினர். இச்சமயத்தில் கம்யூனிஸ்டு கட்சித் தலைமை சீன அனுபவத்தை கிரகிக்காமல் இந்திய ஆளும் வர்க்கங்கள் ஏகாதிபத்திய வாதிகளின் நேரடி வாரிசுகள் என்பதை உணராமல், 'இந்திய ஐக்கியம்' என்ற ஆளும் வர்க்கத்தின் கோஷத்திற்கு இரையாயினர். இந்தியப் படை வந்ததும் முதலில் கம்யூனிஸ்டுகளைத்தான் ஒழித்துக் கட்டிற்று. நிஜாமோடு ஒரு தற்காலிக உடன்பாட்டிற்கு வந்து இரு சக்திகளும் இணைந்து இந்தியப் படையை எதிர்த்து ஒரு தளம் அமைத்திருந்தால் பின்னர் நிஜாமை ஒழிப்பது கடினமானதல்ல. ஏனெனில் நிஜாம் வெளிச்சமாகத் தெரியும் மக்கள் எதிரி என்பது.

ஆனால் இந்திய ஆளும் வர்க்கங்களைப் பற்றி மக்கள் உணரவில்லை. அன்றியும் ஒரு பெரும் சக்தி. இத்தகைய வழிமுறைகளை மேற்கொள்ளாதது மட்டுமல்ல ஆயுதத்தையே இந்திய அரசிடம் ஒப்படைக்கும்படி கோரினர். காட்டிக் கொடுத்தனர்.

ஆக இந்திய ஐக்கியம் ஏற்படுத்தபட்டது முற்போக்குச் சக்திகளை வளர விடாமல் தடுக்கவும் ஒரு பெரிய வலிமையான அரசை உருவாக்கவும் இந்திய மக்கள் அனைவரையும் சுரண்ட வடமேற்கு இந்தியாவின் வளர்ச்சி பெற்றிருந்த தரகு முதலாளிகளின், நிலப் பிரபுக்களின் நலனுக்கும் அவர்களின் எஜமானர்களான ஏகாதிபத்தியங்களின் நலனுக்கும்தான். அன்றைக்குப் போடப்பட்ட இந்திய ஒருமைப்பாடு இன்றும் நீடிக்கிறது. ஆனால் இந்திய மக்களின் நலனுக்காக அல்ல. இந்திய மக்களைச் சுரண்டுவோரின் நலனுக்காகத்தான். மக்கள் நலனில் அக்கறையுள்ள ஒவ்வொருவரும் சிந்திக்க வேண்டிய விஷயம் இது.

இதைப் போன்றே ஜம்மு காஷ்மீரும் ஆக்கிரமிக்கப் பட்டது. 1974இல் சிக்கிம் இணைக்கப்படுகின்றது. முற்போக்குச் சக்திகளை ஒழிப்பதற்காக உருவாக்கப்பட்ட 'இந்திய ஐக்கியம்' என்ற கோஷத்தை ஆளும் வர்க்கங்களும், திரிபுவாதிகளும், வறட்டுவாதிகளும் தொடர்ந்து தூக்கிப் பிடிக்கின்றனர். கூறப்படும் காரணங்கள் பலவானாலும் நோக்கம் ஒன்றே. அது அவர்களுக்கான ஐக்கியத்தைக் கட்டிக் காப்பதே. அன்றியும் உலகில் பிரிட்டன் முதன்மையான வல்லரசாக இருந்த பொழுது இந்திய ஆளும் வர்க்கங்கள் அதன் முதல் தூணாக ஆசிய நாடுகளில் விளங்கிற்று. இரண்டாம் உலக யுத்தத்தில் அது வீழ்ச்சியுற்று அமெரிக்கா உலகின் மேல்நிலை வல்லரசாக வந்தபோது அதனுடைய கையாளாகவும் ஆனது. வியட்நாம் போன்ற மூன்றாம் உலக நாடுகளின் மக்கள் யுத்த எதிர்ப்பாலும், ஏகாதிபத்திய நெருக்கடியாலும் அமெரிக்கா பின்னடைந்து, சோவியத் ரஷ்யா முதல்நிலை வல்லரசாக வந்தபோது அதன் கையாளாகவும் இந்திய ஆளும் வர்க்கங்கள் மாறி இந்திய மக்களையும் அண்டை நாடுகளின் மக்களையும் ஒடுக்குவதில் முன்னணியில் நிற்கிறது. 1971இல் சேகுவேரா இயக்கத்தை

நசுக்கி அண்டை இலங்கை நாட்டின் அரசைக் காப்பாற்றியது குறிப்பிடத் தக்கது. முதன்மை வல்லரசுகள் பிரிட்டன், அமெரிக்கா என வீழ்ச்சியுற்றாலும் முதல் வல்லரசின் கங்காணி என்ற பாத்திரத்தை இந்திய ஆளும் வர்க்கங்கள் இதுவரை இழக்காமல் உலகின் பிற்போக்கு சக்திகளுக்கு முக்கிய தூணாகத் தொடர்ந்து நின்று வருகிறது. உலக மக்களின் விடுதலைக்கும் பிரதான இடைஞ்சலாக உள்ளது. இத்தகைய படுபிற்போக்குத்தனமான வர்க்கங்களைப் பாதுகாக்கும் அரசை உடைத்தெறியக் கிடைக்கும் அனைத்து வாய்ப்புகளையும் பயன்படுத்தாமல் இருப்பது சர்வதேச மக்களுக்கும் சோசலிசப் புரட்சி வளர்ச்சிக்கும் செய்யும் துரோகமாகும். 'விசேஷ நிலைமை' என்ற பெயரில் பலவீனமான இலங்கை நாட்டில் தனிநாடு கோரிக்கையை ஆதரித்து 'நிலைமை வேறு' என்ற பெயரில் 'பாட்டாளி வர்க்க ஒருமைப்பாட்டைக் காத்தல்' என்ற பெயரில் இந்தியாவில் தனிநாடு கோரிக்கையை எதிர்ப்பது என்பது இந்திய ஆளும் வர்க்கங்களுக்கும் ரஷ்ய அமெரிக்க வல்லரசுகளுக்கும் அவசியப்படும் ஒருமைப்பாட்டைக் கட்டிக் காப்பதைத் தவிர வேறெதுவுமல்ல. அவர்களின் ஆதிக்கச் சுரண்டல் இந்தியாவில் பாதிக்கப்படாமலிருக்க இடது, வலது திரிபுவாதிகள் போடும் கூப்பாடு போன்றதே அவை. தேசிய இனங்களின் மொழிவழி மாகாணக் கோரிக்கையையும், விரும்புகின்ற தேசிய இனங்கள் பிரிந்து சென்று தனிநாடு அமைத்துக் கொள்ளலாம் என்பதையும் ஏற்பதாக வாக்குறுதி கொடுத்த காங்கிரஸ் கட்சியினர் 1947க்குப் பிறகு ஆட்சிக் கட்டிலில் ஏறியதும் கொடுத்த வாக்குறுதிகளை மீறினர். நாகா மக்களும், ஜம்மு காஷ்மீர் மக்களும் 'தனிநாடு' கோரிய பொழுது இராணுவத்தை ஏவி அவர்கள் எதிர்ப்பை நசுக்கினர். ஒரே மொழி பேசும் மக்களை, ஒரு தேசிய இனத்தினரை ஒரே மாகாணமாக ஆக்கும் கோரிக்கைகளை ஏறக்குறைய 10 ஆண்டுகளுக்கும் மேலாக நிராகரித்து வந்தனர். ஆந்திராவில் மக்கள் கொந்தளித்ததும், பொட்டி ஸ்ரீராமுலு உண்ணாவிரதம் இருந்து உயிர் நீத்ததற்கும் பின்னர்தான் ஆந்திரா தனி மாநிலமாக அமைக்கப்பட்டது. பிறபகுதி மக்களும் கடுமையாகப் போராடியதன் விளைவே பிறமொழி மாகாணங்களும் பின்னாளில் உருவாக்கப்பட்டன.

ஜார்கண்ட் (பீகாரில் சோடா நாக்பூர் பகுதியைச் சுற்றியுள்ள மாவட்ட மக்கள்) தனி மாநில கோரிக்கை பிரிட்டீஷார் காலத்திலிருந்தே கேட்கப்பட்டு வந்திருக்கிறது. சதீஷ்கர், விதர்ப்பா, தெலுங்கானா மக்களின் தனி மாநில கோரிக்கை இரத்த வெள்ளத்தில் மூழ்கடிக்கப்பட்டு வருகிறது. இந்தியத் தரகு முதலாளிகள், நிலபிரபுக்கள், ஏகாதிபத்தியவாதிகளின் சுரண்டலுக்கு எங்கே இழப்பு ஏற்பட்டு விடுமோ என்ற நிலையில்தான் அவர்களின் அரசியல் கட்சியான காங்கிரஸ் கட்சி சுரண்டப்படுகின்ற ஒடுக்கப்படுகின்ற தேசிய இனங்களின் பிராந்திய மக்களின் கோரிக்கைகளை மறுத்து வருகிறது. அவர்களின் நியாயமான போராட்டங்களைத் துப்பாக்கி முனையில் ஒடுக்குகிறது. அன்றியும் 1963இல் சமாதானக் காவலன் என்றெல்லாம் வருணிக்கப்படும் நேருவால் பிரிவினைத் தடைச் சட்டம் கொண்டுவரப்பட்டு அதிகாரபூர்வமாக எல்லாத் தேசிய இனங்களின் உரிமையைப் பறிப்போம் என்று பிரகடனப்படுத்தப்பட்டது. மிஜோ, மணிப்புரி மக்களின் வளர்ச்சி இந்திய அரசால் ஆளும் வர்க்கங்களால் தடுக்கப்படுகின்றது என்று உணர்ந்ததன் விளைவால் 1960களின் மத்தியிலிருந்து அம்மக்கள் தனிநாடு கேட்டுப் போராடுகின்றனர்.

## மத்திய மாநில அரசு உறவுகள்

இந்திய அரசியலமைப்பு பல்வேறு தேசிய மக்களின் கூட்டாட்சி தன்மையையும் அதே சமயத்தில் மத்தியத்துவ தன்மையும் கொண்டது என்று வர்ணிக்கப்படுகிறது. ஆனால் சாராம்சத்தில் பார்ப்போமெனின் முழுக்க முழுக்க மத்தியப்படுத்தப்பட்ட தன்மைதான் கொண்டிருக்கிறதே யொழிய கூட்டாட்சி தன்மை கொஞ்சமும் கொண்டதல்ல. கூட்டாட்சி தன்மை என்பது முழுக்க முழுக்க பல்வேறு தேசிய மக்களையும் ஏமாற்றுதவதற்கான ஒரு மோசடியே. அரசியலமைப்பின் பிரதான கூறுகளான சட்டம், நிர்வாகம், நீதித்துறை அதிகாரம் பற்றியதில் மைய அரசிற்கும், மாநில அரசிற்கும் உள்ள உறவுகளை ஒப்பிட்டுப் பார்த்தாலே மையப்படுத்தப்பட்ட தன்மையே எல்லா துறைகளிலும் விஞ்சி நிற்பதைக் காணலாம். மாநில சட்டசபையின் சட்டமியற்றும் அதிகாரத்தில் மாநில மக்களின் முக்கிய பிரச்சினையில் தலையிட அதிகாரமில்லை. மக்களை

ஒடுக்குகின்ற காவல்துறை அதிகாரங்கள் பற்றிய அதிகாரங்கள்தான் கூடுதலாக உள்ளது. மாநிலத்தின் தொழில் துறை பற்றி தீர்மானிக்க உரிமையில்லை. எல்லாம் மைய அரசின் கட்டுப்பாட்டிலேயே. மாநில அரசின் சட்டமியற்றும் அதிகாரம் 66 வகைகளில், 30 வகைகள் காவல்துறை பற்றியது. 22 வகைகள் வரிவிதிப்பது சம்பந்தப்பட்டது. 14 வகைகள் மட்டும் தொழில்துறை பற்றியது. இந்த உரிமைகள் கூட மைய அரசினால் 'தேசப் பாதுகாப்பு' என்ற பெயரிலோ, 'பொதுநலன்' என்ற பெயரிலோ சொல்லி மைய அரசினால் எடுத்துக் கொள்ளப்பட இந்திய அரசியல் சட்டத்தில் வழி வகை செய்யப்பட்டிருக்கிறது. மாநில அரசிற்கும் மைய அரசிற்கும் பொதுவாக இருதரப்பும் தலையிட வாய்ப்புள்ள சட்டமியற்றும் அதிகார வரம்புகள் கூட இறுதியில் ஏதோ ஒரு காரணம் சொல்லி எல்லாவற்றிலுமே மைய அரசு தலையிட வழிவகை உள்ளது. மாநில மக்களின் முக்கியப் பிரச்சினைகளைத் தீர்மானிக்க உரிமையற்ற நிலையில் உள்ள மாநில சட்டமன்றமாவது சுதந்திரமாகச் செயல்படுகிறதா வெனில் அதுவும் இல்லை. இந்திய அரசின் தலைவரான ஜனாதிபதியின் ஏஜெண்டுகளாக மாநிலங்களில் உள்ள கவர்னர்கள் அனுமதித்தால்தான் சட்ட மன்றமே இயங்க முடியும். அவருக்குத் திருப்தியில்லையெனில் சட்ட மன்றத்தைக் கலைக்கும் அதிகாரம் உண்டு. தமிழ்நாட்டில் இருதடவை தமிழக மக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்ற சட்டமன்றத்தை மைய அரசு கலைத்திருக்கிறது. இந்தியாவில் பல்வேறு மாநில மக்களின் சட்டமன்றங்களை இதுவரை 64 தடவைகளுக்கும் மேலாகக் கலைத்துள்ளது. அன்றியும் சட்ட மன்றத்தால் இயற்றப்படும் சட்டங்கள் கவர்னர் ஒப்புதல் பெற்றால்தான் ஜனாதிபதி ஒப்புதல் அளித்தால்தான் சட்டமாகும். அன்றியும் கவர்னரோ, சட்டமன்றங்களைக் கலைக்காமலேயே அவசரச் சட்டம் கொண்டு வர இயலும். மாநில அரசின் அனுமதியின்றியே மாநிலத்தின் எந்த ஒரு பகுதியையோ (அ) முழுவதையுமோ 'கலவரப் பகுதியாக' அறிவிக்கலாம். மாநிலங்களுக்குள் ராணுவத்தை அனுப்பலாம்.

மாநில அரசின் நிர்வாக அதிகாரத்திலும் மைய அரசு தலையிட உரிமை உள்ளது. மாநில அரசு நிர்வாகத்தில்

தீர்மானிக்கும் சக்தி வாய்ந்த உயர் அதிகாரிகள் யாவரும் மைய அரசுக்குக் கட்டுப்பட்டவர்களேயொழிய மாநில அரசுக்கு கட்டுப்பட்டவர்களல்ல. நிர்வாகத்தின் அனைத்துத் துறைகளிலும் மாநில நிர்வாக மட்டத்திலிருந்து, மாவட்ட நிர்வாக மட்டம் வரை IAS, IPS படித்த மத்திய அரசின் ஆட்களாக இருந்து கொண்டு மாநில மக்களின் நலன்களை அடகு வைக்கின்ற கைக்கூலிகளே இருக்கின்றனர். மாநில அரசுக்கு நிர்வாகத்தில் எந்தவித உரிமையுமே இல்லை. மாநிலங்களின் நிதி பொறுப்புகள் யாவுமே மாநிலங்கள் கையில் இல்லை. அரசியல் சட்டப்படி ஏற்படுத்தப்படாமல் மைய அரசின் தன்னிச்சையாக உருவாக்கிக் கொண்ட 'திட்ட கமிஷன்', 'தேசிய திட்டக் கவுன்சில்' போன்றவற்றை வைத்துக் கொண்டு மாநில மக்களின் வளர்ச்சிக்கேற்றபடி 'திட்டங்களையோ' நிதி ஏற்பாடுகளையோ' ஏற்படுத்தாமல் அந்நிய ஏகாதிபத்திய கொள்ளையர்களுக்கும், இந்திய தரகு முதலாளி நிலப்பிரபுத்துவ கொள்ளையர்களுக்கும் ஏற்றபடி 'நிதிப்பொறுப்பை' வைத்துக் கொள்கிறது. 'தமிழ்நாட்டிற்கு மைய அரசின் உதவி' கடந்த கால கட்டங்களிலிருந்து படிப்படியாகக் குறைந்து வந்துள்ளதே தவிர தமிழ் மக்களின் தேவையையொட்டி வழங்கப்பட்டவை அல்ல.

| | | | |
|---|---|---|---|
| முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் | | | 10.8% |
| இரண்டாவது | „ | „ | 9.0% |
| மூன்றாவது | „ | „ | 7.4% |
| 1966 to 1969 | | | 6.8% |
| நான்காவது | „ | „ | 4.7% |

ஆக உள்ளதைக் காணலாம்.

நீதித்துறையைப் பொறுத்தவரையில் கூட அந்தந்த மாநில மக்களின் நீதிமன்றமே உச்ச அதிகாரம் கொண்டவை என்பது அல்ல. மாநிலங்களில் உள்ள உயர்நீதிமன்றம் உச்சநீதிமன்றத்தின் ஒரு கீழ்க் கிளையாகவே செயல்பட்டு வருகிறது. உயர்நீதிமன்ற நீதிபதிகளை நியமிக்கும் பொறுப்பும் மாநில அரசுக்குக் கிடையாது. மைய அரசே தீர்மானிக்கும் விதத்தில் அரசியல் சட்டம் வரையப் பெற்றுள்ளது. அண்மையில் மாநில உயர்நீதிமன்ற நீதிபதிகளில் 1/3

பங்கினரும் தலைமை நீதிபதியும் வெளி மாநிலத்தவராக இருக்க வேண்டும் என நிர்ணயம் செய்யப்பெற்றுள்ளது. இருக்கின்ற கொஞ்ச நஞ்ச நீதிமன்ற உரிமைகள் கூட பறிக்கப்படும் முயற்சியே இது.

ஒவ்வொரு தேசிய இனத்திலுமுள்ள தரகு முதலாளித்துவ நில பிரபுத்துவ வர்க்கங்கள் தங்கள் தேசிய இன மக்கள் எழுச்சியைக் கண்டஞ்சி இந்தி தரகு முதலாளித்துவ நிலபிரபுத்துவ வர்க்கங்களின் மையப்படுத்தப் பட்ட அதிகாரத்தை ஏற்றுக் கொள்வதால் அந்தந்த தேசிய இனங்களிலும் (மாநிலங்களில்) அவர்களைப் பிரதிநிதித்துவ படுத்துகின்ற அரசியல் கட்சிகள் இந்திய அரசின் இந்த மத்தியத்துவப்பட்ட தன்மையை அப்படியே ஏற்றுக் கொள்கின்றன. பெயருக்கு மாநில சுய ஆட்சி என்று போலிக் கூச்சல் போடுகின்றன.

## மொழிப் பிரச்சினை

பிரிட்டிஷ் இந்தியாவின் ஒரே ஆட்சிமொழி இந்தி மட்டுமே என 1917லேயே காங்கிரஸ் தலைமை அறிவித்திருந்தது. 1938 வாக்கில் அதை நடைமுறைப் படுத்தவும் முயற்சித்தது. அரசியலதிகாரம் கைமாறியவுடன் அரசியலமைப்பிலேயேய அதை நிர்ணயம் செய்து கொண்டது. அரசியலமைப்புப்பிரிவு 17இல் 343 – 348 வரையிலான விதிகளில் 343 – 344 விதிகள் ஆங்கிலம் பயன்படும் அனைத்துத் துறைகளிலும் இந்தி பயன்படுத்தப்பட வேண்டும் என்கிறது. பிராந்திய மொழிகளென்ற தலைப்பில் 345, 346, 347 விதிகளின்படி எட்டாவது அட்டவணையிலுள்ள 15 மொழிகளுள் வழக்கற்றுப் போன சமஸ்கிருதமொழி ஒரு மொழியாகிறது. விதி 346 ஒரு மாநில சட்டமன்றம் அந்த மாநிலத்தில் வழக்கத்திலுள்ள ஏதாவதொரு மொழியையோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளையோ அல்லது இந்தியையோ எல்லா அலுவலக நடைமுறைகளுக்குமோ அல்லது ஏதாவதொரு அலுவலக நடைமுறைக்குமோ உரியமொழி என சட்டம் இயற்றலாம் என்கிறது. அப்படிச் சட்டமியற்றும் போதும் 346, 347 விதிகள் கூறுவதென்ன? இந்தியையல்லாமல் பிராந்திய மொழிகள் ஒன்றோ, பலவோ

ஆட்சி மொழிகளாக்கப்படுமானால் ஆங்கிலமும் தொடர்ந்தாக வேண்டுமென்பதே. இந்தியை ஆட்சி மொழியாக்கும் மாநிலங்களுக்கு ஆங்கிலமும் அவசியமில்லை, எம்மொழியும் அவசியமில்லை. மேலும் தொடர்பு கொள்ளும் அலுவல்களுக்கு இந்தியைப் பயன்படுத்தலாமென்றும் இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட மாநிலங்கள் ஒப்புக் கொண்டால் அதன்படி இந்தியைப் பயன்படுத்தலாமென்றும் கூறுகிறது. அதாவது மாநில அரசு செயல்படவும் இந்தி, மாநில அரசும் மத்திய அரசும் தொடர்பு கொள்ளவும் இந்தி, மாநில அரசும் மாநில அரசும் தொடர்பு கொள்ளவும் இந்தி, மத்திய அரசு செயல்படவும் இந்தி. இத்தகைய இந்தி ஒன்றே ஆட்சிமொழி என்ற அரசியல் சட்டத்தை அரசியல் அமைப்பிலிருந்து ரத்து செய்யும்படி கோர மார்க்சிஸ்ட் லெனினிஸ்டுகள் உட்பட எவருமே தயாரில்லை. அரசியலமைப்பிலிருந்தே நீக்க முயலாமல் இந்தியைத் திணிக்காதே என்று மக்களை ஏமாற்றும் கூச்சல் போட மட்டும்தான் தயாராயுள்ளனர். இப்படி அரசியலமைப்பே மைய அரசே, இந்தி தேசிய இனத்து தரகு முதலாளித்துவ நில பிரபுத்துவ சக்திகளுக்குச் சேவை செய்வதையே மையமாகக் கொண்டது. ஒவ்வொரு தேசிய இனத்தையும் கொள்ளையடிக்க அந்தந்த தேசிய இனத்திலுமுள்ள தரகு முதலாளித்துவ நிலபிரபுத்துவ சக்திகளுக்குச் சுரண்டலில் கொஞ்சம் பங்களிக்கிறது. அத் தேசிய இன மக்களின் தாக்குதலிலிருந்து பாதுகாப்பு தருகிறது. தொழில் உற்பத்தி, மூலதனம், சந்தை, கச்சாப்பொருள் யாவற்றையும் தனது கட்டுப்பாட்டிற்குள்ளேயே வைத்துக் கொள்வதில் கவனமாக இருக்கிறது.

## தேசீய இன விடுதலைப் போராட்டங்கள்

30 ஆண்டுகளுக்கும் மேலாக 'தனிநாடு' கோரி ஆயுதப் போராட்டம் நடத்தி வரும் நாகா மக்கள் வடகிழக்கு இந்தியாவில் பழங்குடி மக்கள் ஆவர். பிரிட்டீஷார் இந்தியா முழுமையும் வென்றடிமைப்படுத்தினாலும் நாகர்களை முழுமையாக அடிமைப்படுத்த இயலவில்லை. நாகர்களின் எதிர்ப்பை சமாளிக்க இயலாமல் அவர்களுடன் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டு அவர்கள் வாழ்வில் குறுக்கிடவில்லை. பிரிட்டீஷார் இந்தியாவை விட்டு

வெளியேறும்போது நாகர்கள் ‘தங்களைச் சுதந்திரமாக விட்டுச் செல்ல வேண்டும்’ என்று கோரினர். பிரிட்டிஷார் இந்திய ஆளும் வர்க்கங்களிடமே பிரச்சினையை விட்டுச் செல்கின்றனர். இவர்கள் நாகர்களின் ‘தனிநாடு’ கோரிக்கையை மறுத்ததால் ஒரு சமரசத் திட்டத்தை நாகர்கள் வைத்தனர். ‘10 ஆண்டு இடைக்கால அரசு தாங்கள் அமைத்துக் கொள்ளவும், பாதுகாப்பிற்காக இந்திய சர்க்கார் நாகாலாந்தில் ஒரு படைப்பிரிவு வைத்துக் கொள்ள அனுமதிப்பதாகவும், 10 ஆண்டுகளுக்குப் பின்னர் தங்களுடைய பிரச்சினையைப்பற்றி தாங்களே முடிவு செய்து கொள்ள விட்டுவிட வேண்டும்’ என்பதே அத்திட்டமாகும். இந்திய அரசால் இத்திட்டம் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. 1952 முதல் பொதுத் தேர்தலை நாகா மக்கள் முழுமையாகப் புறக்கணித்தனர். பின்னர் நாகா மக்களின் அரசியல் கட்சியான நாகா தேசிய கவுன்சில் ‘நாகாலாந்து தனி அரசு’ ‘தனிநாடு’ என்று அறிவிக்கிறது. 1950களின் மத்தியில் நாகா மக்களை நசுக்க இந்திய ராணுவம் ஏவப்படுகிறது. அன்று 3.5 லட்சம் மக்கள் தொகையாக இருந்த நாகாவை அடக்க 50,000 இந்திய சிப்பாய்கள் அனுப்பப்படுகின்றனர். இந்திய ராணுவத்தால் நாகர்களின் எழுச்சியை அடக்க இயலவில்லை. பின்னர் சமாதான தூதுக்குழு ஒன்று அனுப்பப் படுகின்றது. அக்குழு நாகா மக்களின் ‘தனிநாடு’ கோரிக்கை நியாயமானது என அறிவிக்கிறது. ஆனால் இந்திய அரசு நாகர்களின் வசதி படைத்த பிரிவினரை சலுகைகள் வழங்கி இந்திய அரசோடு ஒத்துழைக்க ஒப்ப வைத்து தனி மாநிலம் தருகின்றனர். ஆனால் நாகா மக்களும் புரட்சியாளர்களும் தனிநாடு கோரிக்கைக்காக விட்டுக் கொடுக்காமல் இன்றுவரை ஆயுதப் போராட்டம் நடத்தி வருகின்றனர்.

இந்திய அரசு சமஸ்தானங்களை வலுக்கட்டாயமாக இணைத்த சமயத்தில் காஷ்மீரையும் இணைத்தது. காஷ்மீர் மன்னன் இந்து, மக்களில் பெரும்பான்மை முஸ்லீம். முதலில் இணைய மறுத்த காஷ்மீர் மன்னன் பாகிஸ்தானில் பட்டாணியர் பழங்குடி மக்களின் படையெடுப்பின் போது இணைந்தார். ஆனால் காஷ்மீர் மக்கள் தனித்து இருக்கவே விரும்பினர். காஷ்மீரிகளின் தனிநாடு கோரிய சக்திகளை

நசுக்கி, தங்கள் ஏஜெண்டுகளை வைத்துக் கொண்டு இதுநாள்வரை இணைத்து வைத்திருக்கின்றனர். தனிநாடு அந்தஸ்து கோரிய ஷேக் அப்துல்லாவை 12 ஆண்டுகாலம் அதாவது நேரு இறக்கும் வரை சிறை வைத்திருந்தார். பின்னர் கூட காஷ்மீரானது தனி அரசியல் நிர்ணயச் சட்டத்தின் படிதான் பிணைக்கப்பட்டுள்ளது. காஷ்மீர் விடுதலை முன்னணி, காஷ்மீர் விடுதலைப் படை அமைத்துக் கொண்டு காஷ்மீர் தனிநாடு கோரி போராடி வருகின்றது. அண்மையில் இவர்களின் ஸ்தாபகரான மக்பூல்பட்டை இந்திய அரசு தூக்கில் ஏற்றியுள்ளது.

வடகிழக்கு இந்தியாவில் கடந்த ஐந்தாண்டுகளுக்கும் மேலாக நடைபெற்று வரும் அசாம் மக்களின் அந்நியரை வெளியேற்றுக எனும் உரிமைப் போராட்டம் இந்திய மக்களின் விடுதலைப் போராட்டத்தை முன்னுக்குத் தள்ளுவதில் பெரும்பங்கு வகிக்கிறது. இந்திய அரசியல் நடத்தைகளை ஏற்றுக்கொள்ள முடியாதென கடந்த இரு பாராளுமன்ற பொதுத்தேர்தல்களையும் புறக்கணித்துவிட்டு தொடர்ந்து போராடி வருகின்றனர். பிரிட்டீஷ் ஏகாதிபத்திய வாதிகள் இந்தியாவை அடிமைப் படுத்தியதில் ஒரு குறிப்பிடத் தக்க பாதகமான விளைவு என்னவெனில் ஏற்றத்தாழ்வான பிராந்திய வளர்ச்சியே. இதில் அசாம் மாநிலமும் வெகுவாக பாதிக்கப்பட்டது. இந்திய ஆளும் வர்க்கங்களின் கையில் அரசியல் அதிகாரம் வந்த பின்னரும் அசாம் புறக்கணிக்கப்பட்டும் சுரண்டப்பட்டுமே வந்தது. அதன் விளைவே இன்றைய அசாம் போராட்டம். முதலில் வளர்ச்சி பெற்ற வங்காளி தேசிய இனத்தின் படித்த மத்திய தரப் பிரிவினரும் வணிகர்களும் பிறரும் வளர்ச்சியற்றிருந்த அசாமில் குடியேறி அசாமியரின் பொருளாதார கலாச்சார துறைகளில் ஆதிக்கம் செலுத்தலாயினர். இந்தக் குடியேற்றம் தொடர்ந்து இன்றுவரை நடந்து வருகிறது. பாகிஸ்தான் பிரிவினையின் போதும் வங்காள தேசம் உருவான போதும் பெருவாரியான வங்கதேச மக்கள் குடியேறினர். இந்தியத் தரகு முதலாளிகளும் ஏகாதிபத்திய வாதிகளும் அசாமில் பெருமளவில் சுரண்டி வருகின்றனர். பிரிட்டிஷாரின் காலத்திலேயே அசாமில் வங்காளி மொழி ஆட்சி மொழியானது. 1837லிருந்து 60 ஆண்டுகளுக்கும் மேலாக இருந்துள்ளது. அசாமியரின் போராட்டத்தினால்தான்

அசாம் ஆட்சிமொழியானது. அசாமில் வேலை வாய்ப்பில் வங்காளியர் ஆதிக்கம் நிறைந்துள்ளது. ரயில்வேயில் 83% வங்கித் துறையில் 60% வெளி மாநிலத்தவரே. இந்திய மக்களின் வளர்ச்சி விகிதம் தேசிய அளவில் சராசரியாக ஒரு மடங்கு எனில் அசாம் மக்களின் வளர்ச்சி விகிதம் மூன்று மடங்காக உள்ளது. 1901இலிருந்து 1971 வரை (129.67% 344.87%) அசாம் தேயிலைத் தொழிலில் ஆதிக்கம் செலுத்துவோர் வெளியாரே. பெட்ரோலிய எண்ணெய் மத்திய அரசின் கட்டுப்பாட்டில் உள்ளது. இந்தியாவில் அதிக எண்ணெய் வளம் உள்ள அசாமில் எண்ணெய் சுத்திகரிப்பாலை இல்லை. ஆக அரசியல் பொருளாதார கலாச்சாரத் துறைகளில் தங்கள் மண்ணிலேயே உரிமையற்று இருப்பதால்தான் அசாமியர் போராடுகின்றனர். பஞ்சாப் மக்களின் போராட்டம் இன்று இந்திய ஆளும் வர்க்கங்களையே, அவற்றின் அரசையே கதிகலங்க வைக்கிறது. மாநில அரசுக்கு அதிக அதிகாரம் வேண்டும் எனவும் பஞ்சாபி மொழி பேசும் பகுதிகளை பஞ்சாப்போடு இணைக்க வேண்டும் எனவும், பஞ்சாபிற்கு பியாஸ் நதிநீர் நியாயமாகப் பகிர்ந்தளிக்கப்பட வேண்டும் எனவும் தங்கள் மத உரிமைகள் மதிக்கப்பட வேண்டும் எனவும் கோரி போராடி வருகின்றனர். கடந்த 3 ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய அரசை எதிர்த்துப் போராடுகின்றனர். இதுவரை 2 லட்சத்திற்கும் மேற்பட்ட பஞ்சாபியர்கள் சிறை சென்றுள்ளனர். 300க்கும் மேற்பட்ட சீக்கிய போராளிகள் உயிரிழந்துள்ளனர். கடந்த ஒரு வருடமாக 3 மாவட்டங்களை கலவரப் பகுதியாகவும் இன்று பஞ்சாப் முழுமையையும் கலவரப் பகுதியாகவும் அறிவித்து பஞ்சாபில் ராணுவ சர்வதிகாரம் நடத்தி வருகிறது இந்திய அரசு.

தமிழ்நாட்டிலும் (1938, 1965) கடுமையான இந்தி எதிர்ப்புப் போராட்டங்களும், கடந்த 50 ஆண்டுகாலமாக தேசிய எழுச்சியும் இருந்து வந்துள்ளன. ஆக இந்திய சமுதாயத்தில் தேசிய இனங்கள் தேசிய உரிமைகள் கோரியும் விடுதலை கோரியும் போராட்டங்கள் தொடர்ந்து நடத்தி வருகின்றன. சமூகத்தில் ஒவ்வொரு வர்க்கமும் தங்கள் தங்கள் நலனுக்கேற்ப இப்பிரச்சினையை அணுகுகின்றன. ஒவ்வொரு தேசிய இனத்திலும் உள்ள தரகு முதலாளித்துவ நிலப்பிரபுத்துவ சக்திகளிடம் பேரம் பேச, சலுகைகள் கோர

தங்கள் தங்கள் தேசிய இன எழுச்சியைப் பயன்படுத்திக் கொள்கின்றன.

பிரிட்டிஷார் இருக்கும்போதே தமிழ்நாட்டில் முகிழ்த்த முதலாளித்துவ கூறுகள் தேசிய விடுதலை இயக்கத்தை எடுத்தது. அவர்கள் ஏகாதிபத்தியவாதிகளை எதிர்ப்பதில் கொஞ்சம்கூட அக்கறை செலுத்தவில்லை. மாறாக ஏகாதிபத்திய வாதிகளுடன் இணைந்து கொண்டு தன் மூலதனத்தைப் பெருக்கிக் கொள்ள இயலுமா என்பதே அதன் கவலையாக இருந்தது. வட இந்திய தரகு முதலாளிகளை எதிர்ப்பதில்தான், அதற்காக ஏகாதிபத்திய வாதிகளுடன் துணை சேர்ந்து கொள்ளலாமா என்பதே அதன் அவா. இதற்குத் தென்னிந்திய நிலபிரபுக்களையும் தரகு முதலாளிகளையும் தன் பக்கம் இணைப்பதில் அது முயற்சித்தது. ஆனால் தென்னிந்தியாவின் நிலபிரபுத்துவ, தரகு முதலாளித்துவ வர்க்கங்கள் வட இந்திய தரகு முதலாளிகளைக் கண்டு அதிகம் அஞ்சியது. எனவே தமிழ் தரகு முதலாளித்துவ, நிலப்பிரபுத்துவ சக்திகள் தனிநாடு கோரிக்கையை வைத்தது. பிற வர்க்கங்களைப் பொறுத்தவரை நிலபிரபுத்துவ எதிர்ப்பு கோஷங்களைக் கண்டு மயங்கி தங்களுக்கு உண்மையான சேவகர்கள் என்று நம்பி வந்தன. இவர்கள் தரகுத் தன்மை உடையவர்களானதால் போராட்டத்தைத் தொடர்ந்து முன்னெடுத்துச் செல்லவில்லை...

ஆரம்பத்தில் சீக்கியர்களைப் பொறுத்தவரையும் கிட்டத்தட்ட இதே நிலைமைதான். வடகிழக்கு மாநிலத்தைப் பொறுத்தவரை ஆரம்பமுதல் தேசிய முதலாளித்துவச் சக்திகளும் குட்டி முதலாளியச் சக்திகளும்தான் தேசியப் போராட்டத்தை முன்னெடுத்து நிற்பவர்கள். இந்தியாவின் பிறபகுதிகள் கடந்த காலங்களில் சிற்சில அளவில் முற்போக்காக இருந்த சக்திகள் உட்பட, அவர்கள் போராட்டத்தை ஆதரிக்காததும் (சொல்லளவில் ஆதரவு என்பதும் நடைமுறையில் இம்மியளவு கூட ஆதரவு நல்காததுமே உண்மை) இந்திய ஆளும் வர்க்கம் என்ற மிகமிகப் பெரிய எதிரியை மிகமிகச் சிறிய சக்தி எதிர்த்து நின்றதுமே இதுவரை வெற்றியடையாமைக்கு உண்மைக் காரணம். ஆனால், இந்திய அரசு என்னும் வலிமையான

எதிரியை எதிர்த்து இவ்வளவு காலம் நீடித்து நிற்பதே அவர்களின் போராட்ட உணர்வினையும் தேசியப் பிரச்சினையின் முக்கியத்துவத்தையும் வலியுறுத்துகிறது. அசாம் பிரச்சினையைப் பொறுத்த வரை சமீபத்தில் குட்டி முதலாளித்துவச் சக்திகள்தான் தேசிய முதலாளிகள் உட்பட போராட்டத்தை முன்னெடுத்துச் செல்கிறது. பஞ்சாப் பிரச்சினையைப் பொறுத்தவரை தரகுச் சக்திகளும் தேசிய முதலாளித்துவச் சக்திகளும் பிரச்சினையை எடுக்க முனைகின்றன. தேசிய முதலாளித்துவ சக்திகள் காஷ்மீர் விடுதலைக்குப் போராடுகின்றன. இன்றைய உலகச் சூழ்நிலையைப் பொறுத்தவரை தேசிய முதலாளித்துவச் சக்திகளும் குட்டி முதலாளித்துவச் சக்திகளும் இப்பிரச்சினையைத் தீர்க்குமா? இறுதிவரை வெற்றிக்கு இட்டுச்செல்ல முடியுமா? என்பது கேள்விக்குரிய ஒன்று. பாட்டாளி வர்க்கத்தைப் பொறுத்தவரை அது ஆரம்பித்ததிலிருந்தே தன்னை ஒரு வர்க்கச் சக்தியாகவும், அரசியல் சக்தியாகவும் உருதிரட்டிக் கொள்ளவில்லை. பாட்டாளி வர்க்க இயக்கத்தைப் பொறுத்தவரை ஆளும் வர்க்கத்திற்கு வால் பிடிக்கும் தன்மை கொண்டாகவும், திருத்தல் வாதத் தன்மை கொண்டதாகவும், சீர்குலைவுத் தன்மை கொண்டதாகவும்தான் சரித்திரம்.

பாட்டாளி வர்க்க இயக்கம் உடனடியாகத் தன்னை ஒரு அரசியல் சக்தியாக உருப்பெறச் செய்து கொள்வதும், சமூகத்தின் எல்லாப் பிரச்சினைகளையும் தன்கையில் எடுப்பதும் அவசியம்.

சமூக வளர்ச்சியின் நலன்களுக்கேற்பவும் தனது வர்க்க நலனுக்கேற்பவும் தேசிய இனப் பிரச்சினையையும் பாட்டாளி வர்க்கம் எடுக்க வேண்டியுள்ளது. ஏனெனில் இந்திய சமுதாய வளர்ச்சியில் சமீப காலங்களில் தொடர்ந்து வளர்ந்து வரும் ஒரு பிரச்சினையாக இது காணக் கிடக்கிறது. சமுதாயத்தில் இதற்கான அடிப்படைக் காரணங்கள் இன்றி இவை தொடர்ந்து வளர்ச்சி பெற்று வர இயலா. ஓரளவு முதலாளித்து உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சியும், ஏகாதிபத்தியங்களின் அவர்களது ஏஜெண்டுகளின் கூட்டுக் கொள்ளையும்தான் இதற்கான அடிப்படை. உற்பத்தியின் வளர்ச்சிக்கும் சமூக வளர்ச்சிக்கும் ஏகாதிபத்தியங்களும்

அவர்களது ஏஜெண்டுகளும் தடையாக இருப்பதன் விளைவே இப்போராட்டங்கள். சுரண்டப்படுகின்ற ஒடுக்கப்படுகின்ற தேசிய இனங்களுக்கும் (தேசிய முதலாளி உட்பட அனைத்து வர்க்கங்களுக்கும்) ஏகாதிபத்தியங்களின் ஏஜெண்டுகளாக இருந்து கொண்டு அவற்றை அடக்கி ஒடுக்குகின்ற இந்திய ஆளும் வர்க்கங்களுக்கும் இடையில் ஒரு அடிப்படைப் பிரச்சினையாக ஒரு அடிப்படை முரண்பாடாக வளர்ந்து வந்திருக்கிறது.

இந்தியாவில் மத்திய அரசுக்கும் (அதாவது இந்தித் தரகு முதலாளித்துவ நிலப்பிரபுத்துவ வர்க்கங்களை மையமாகக் கொண்ட இந்திய அரசுக்கும்) தேசிய இனங்களுக்கும் இடையில் ஓர் அடிப்படை முரண்பாடு நிலவுகிறது. சமூக வளர்ச்சியின் சாரத்தைத் தீர்மானிக்கும் அடிப்படை முரண்பாடுகளில் ஒன்றாகவும் இது உள்ளது. தேசிய இனங்களுக்கிடையில் சமத்துவத்தைச் சாதிக்கும் புதிய ஜனநாயக சாரம் உடையதாக உள்ளது. இதற்குரிய தீர்வு இனவிடுதலையே. அந்நிய ஆதிக்கத்தையும் சுரண்டலையும் ஒழித்துக் கட்டுவதே இனவிடுதலை என்கிறோம். அதாவது இன்றைய உலகில் அந்நிய அமெரிக்க, ரஷ்ய சமூக ஏகாதிபத்தியங்களும் அவற்றுக்குத் துணநிற்கும் தரகு முதலாளித்துவ நிலப்பிரபுத்துவ வர்க்கங்களதும் சுரண்டலாதிக்கத்தை ஒழித்துக் கட்டுவதே. இந்த இன விடுதலையைச் சாதிப்பதென்பது இரு வழிகளில் சாத்தியப்படும். ஒரு தேசிய இனம் எப்போது வேண்டுமானாலும் விரும்பும் போது தனிநாடாகி கொள்ளலாம் என்னும் தனிநாட்டுரிமையை இனவிடுதலை யுத்தம் நடத்தி சாதித்து சேர்ந்து வாழ்வதும் இனவிடுதலையே. அதற்குப் பதிலாக இனவிடுதலை யுத்தம் நடத்தி அந்நிய ஆதிக்கச் சுரண்டலை ஒழித்துத் தனிநாடாகவே பிரிந்து வாழ்வதும் இனவிடுதலையே. ஆனால் ஆதிக்கச் சுரண்டலை ஒழிக்காமல் ஏகாதிபத்தியங்கள் தங்களுக்கிடையிலான சுரண்டலாதிக்கப் போட்டியினால் தங்கள் தங்கள் தரகர்களைக் கொண்டு யுத்தம் நடத்தி பிரதேசத்தையும் மக்களையும் இன அடிப்படையில் தனி நாடுகளாகப் பிரித்துக் கொள்வதுமுண்டு. இது எவ்விதத்திலும் இனவிடுதலை

யாகாது. அமெரிக்க அடிவருடிகளின் கையிலிருந்த பாகிஸ்தானை ரஷ்யாவும் இந்தியாவும் தங்களது அடிவருடியான முஜிபுர் ரஹிமானுடன் சேர்ந்து வங்கதேசமென்ற பெயரில் துண்டாடினர். ஏகாதிபத்தியங்களின், அவர்களின் ஏஜெண்டுகளின் சுரண்டலை நீடிக்கும் முயற்சியே இது என்பதால் இனவிடுதலையாகாது. எனவே, அந்நிய ஆதிக்கத்திலிருந்தும் சுரண்டலிலிருந்தும் இந்தியாவின் எல்லா தேசிய இனங்களும் விடுதலை பெற வேண்டும் என்பதே நமது கொள்கை. எல்லாத் தேசிய இனங்களும் அரசியல் சுதந்திரம் பெறவேண்டும் என்பதே , அரசியல் சுதந்திரத்துடன் கூடிய ஒரு கூட்டாட்சி அமைத்துக் கொள்ளவும், விரும்பினால் தனிநாடாக்கிக் கொள்ளலாம் என்பதே நமது நிலை. இதற்காக ஒடுக்கப்படுகின்ற தேசிய இனங்களின் விடுதலைப் போராட்டத்தை முன்னெடுப்போம்.

## ரஷ்யத் தீர்வேஇந்தியத் தீர்வாக முடியாது ஏன்?

இந்தியாவின் தேசிய இனப்பிரச்சினையையும் ரஷ்யாவின் தேசிய இனப் பிரச்சினையையும் வறட்டுத்தனமாக ஒப்பிட்டுப் பேசுகின்றனர் இங்குள்ள திருத்தல்வாதிகளும் சரி, ஒரு சில மார்க்சிஸ்ட் – லெனினிஸ்டுகளாயினும் சரி. ஒரு நாட்டின் சமூகப் பிரச்சினையை இன்னொரு நாட்டின் சமூகப் பிரச்சினையோடு ஒப்பிடும் போதே இரண்டினதும் உள்ளடக்கம் ஒப்பிடும் தன்மை கொண்டதா என்பதை முதலில் கவனிக்க வேண்டும். அதைக் கவனிக்காமல் வறட்டுத் தனமாக பேசுவது முட்டாள்தனம் என்கிறார் லெனின். ரஷ்ய சமூகத்தன்மை என்ன? ரஷ்ய சமூகம் ஏறக்குறைய முழுமையாக வளர்ச்சி பெற்றுவிட்ட ஒரு முதலாளித்துவ சமூகம். உற்பத்தி உறவுகளில் மட்டும் நிலப்பிரபுத்துவ உற்பத்தி உறவு மேலோங்கி நிற்கிறது. நிலப்பிரபுத்துவ அரசு சமூக வளர்ச்சிக்குத் தடங்கலாக இருக்கிறது. பாட்டாளி வர்க்க இயக்கம் தன்னை ஒரு அரசியல் சக்தியாகத் திரட்டிக் கொண்டு முதலாளித்துவத்தையும் நிலபிரபுத்துவ அரசையும் எதிர்த்து ஜனநாயக சோசலிசப் புரட்சிக்காகப் போராடுகிறது. அரசியல் சுதந்திரம் உடனடியாகப் பெறுவதும் சோசலிசப் புரட்சியைத்

தொடர்ந்து வெற்றி பெறச் செய்வதும் பாட்டாளி வர்க்கத்தின் லட்சியமாக இருக்கிறது. இச்சமூக நிலைமைகளில் பாட்டாளி வர்க்கத்திற்கு தேசிய இனப் பிரிச்சினை ஒரு பிரச்சினையாக எழவில்லை. எல்லா தேசிய இனங்களுக்கும் சுயநிர்ணய உரிமை உண்டு என்னும் பொதுப்படையான கோஷத்தில் அனைவரையும் திரட்டி எதிரிக்கு எதிராகப் போராட முடிந்தது.

ஆனால் இந்தியாவின் நிலைமை என்ன? இது அரைக்காலனி அரைநிலப்பிரபுத்துவ சமூக அமைப்பு கொண்ட நாடு. இங்கு பாட்டாளி வர்க்கம் சோசலிசப் புரட்சி உடனடி சாத்தியம் என்று கருதவுமில்லை. சோசலிசம் அதன் இறுதிக் குறிக்கோள் எனினும் ஒரு ஜனநாயகப் புரட்சியின் மூலம்தான் அந்தக் குறிக்கோளை எட்ட முடியும் என்பதால் பிரதானமான சாராம்சத்தில் முதலாளித்துவப் புரட்சிதான் இன்றைய உடனடிக் குறிக்கோளாக உள்ளது. முதலாளித்துவத்தில் தேசிய இனப்பிரச்சினையும் உயிர் நாடியானது. எப்படி விவசாயப் பிரச்சினை, விவசாயப் புரட்சி உயிர்நாடியானதோ அப்படி. அப்படியெனில் தேசிய இனப் பிரச்சினை இந்திய ஜனநாயகப் புரட்சியில் ஒரு முக்கிய அடிப்படை பாத்திரத்தை வகிக்கிறது. அடிப்படை அம்சமற்ற ரஷ்ய தேசிய இனப்பிரச்சினையையும் வெவ்வேறு வழிகள் மூலம்தான் தீர்க்க இயலும். குறிப்பாக இரு நாடுகளினதும் தேசிய இனப் பிரச்சினையைக் கவினிப்போம்.

முதலாவதாக ரஷ்யா ஒரு சுதந்திரமான நாடாகும். எந்த நாட்டுக்கும் காலனியாக இருந்ததில்லை. மாறாகத் தோழர் மாவோ குறிப்பிடுவது போல ஒரு ராணுவ – நிலப் பிரபுத்துவ ஏகாதிபத்தியமாக இருந்தது. மற்ற நாடுகளை அடிமைப்படுத்துவதாகவும் இருந்தது. அப்படிப்பட்ட ஒரு சுதந்திர நாட்டில் அந்நிய ஏகாதிபத்தியத்தின் பெரும மூலதனப் போட்டியை சந்திக்க வேண்டிய தேவையில்லை. மாறாக உள்நாட்டு ஒடுக்கும் தேசிய இன ஒடுக்கப்படும் தேசிய இன மூலதனங்களுக்கிடையே கூட பெருத்த போட்டியிட முடியாத வித்தியாசம் இல்லை. ஏனெனில் தேசிய இன வளர்ச்சி ரஷ்ய தேசிய இனத்தை விட பிற தேசிய இனங்களில் கூடுதலாகவே இருந்தது. எனவே, தனிநாடு கோரும் அவசியம் எழுவதில்லை. ஆனால் இந்தியா

போன்ற அரைக்காலனி நாடுகளில் ஒரு ஏகாதிபத்திய மூலதனத்தையல்ல பல ஏகாதிபத்தியங்களின் பன்னாட்டு மூலதனத்தை பிறவி முதலே அருகி வளர்ந்த மிகச் சிறிய அற்ப தேசிய முதலாளியின் மூலதனம் சந்திக்க முடிவதில்லை. போட்டியிடவே முடிவதில்லை. மலைக்கும் மடுவுக்குமான வித்தியாசம் இருப்பதால் தன்னைத் தற்காத்துக் கொள்ள, வாழ்வா சாவா போராட்டத்தில் வெற்றியடைய தனக்கு மட்டும் உத்தரவாதமான, நிரந்தரமான சொந்த சந்தையைச் சாதித்துக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. இதனால் மத்திய அரசுக்கும் தேசிய இனங்களுக்கும் இடையிலான மோதல் கூர்மை அடைகிறது.

அன்றியும் ஏகாதிபத்தியங்களின், தரகு முதலாளிகளின் சுரண்டலால் பாதிக்கப்படுவது தேசிய முதலாளிகள் மட்டுமல்ல. அந்தந்த தேசிய இனங்களிலும் உள்ள குட்டி முதலாளித்துவ வர்க்கம், விவசாயிகள், பாட்டாளிகள் என அனைத்துத் தரப்பு மக்களுமே பாதிக்கப்படுகின்றனர். இன்னும் சொல்லப்போனால் இவர்கள்தான் அதிகம் பாதிக்கப்படுகின்றனர். காலனி நாடுகளில் தேசியப் பிரச்சினை என்பது சாராம்சத்தில் விவசாயப் பிரச்சினைதான். ஏனெனில் ஏகாதிபத்தியங்களால் அதிகம் சுரண்டப்படுவோர் விவசாயிகளே என ஸ்டாலின் குறிப்பிடுவதைக்காணலாம். காலனி நாடுகளின் முதலாளிகள் பாதிக்கப்படுவதை விட விவசாயிகளே அதிகம் பாதிக்கப்படுகின்றனர் என்ற அர்த்தத்தில் குறிப்பிடுகிறார். ஒரு அரைக்காலனி நாட்டில் ஏகாதிபத்தியங்களின், அந்நாட்டு தரகு முதலாளிகளின் நிலபிரபுக்களின் கூட்டுச் சுரண்டலால் ஒவ்வொரு தேசிய இனமும் கடுமையாகப் பாதிக்கப்படுகின்றது. இதன் விளைவாகத்தான் இங்கே தேசிய இன எழுச்சி, ஒரு தேசிய இனத்தின் மக்கள் பிரச்சினையாக மாறுகிறது.

இரண்டாவதாக, ரஷ்யாவில் ஒடுக்கும் தேசிய இன ஒடுக்கப்படும் தேசிய இன முதலாளிகள், நிலப்பிரபுக்களின் ஆட்சியைத் தூக்கியெறிவதை நோக்கமாகக் கொண்டவர்களல்ல. மாறாகக் கட்டிக் காப்பதையே நோக்கமாகக் கொண்டவர்கள். எனவே, ரஷ்ய ஜனநாயக புரட்சியில் முதலாளி வர்க்கம் எதிரியாகவே நிற்கிறது என

தோழர் லெனின், ஸ்டாலின், மாவோ மூவருமே குறிப்பிட்டு சென்றுள்ளனர். தோழர் மாவோ மற்ற நாடுகளுக்கு எதிராக ஆக்கிரமிப்பை நடத்திய ஒரு ராணுவ நிலப்பிரபுத்துவ ஏகாதிபத்தியமாக ஜாரின் ரஷ்யா இருந்ததால் ரஷ்ய முதலாளி முழுக்கவும் புரட்சிகர குணாம்சம் இல்லாமலிருந்தது. அங்கு பாட்டாளியின் கடமை முதலாளியை எதிர்ப்பது அதனுடன் சேர்வதல்ல. ஆனால் ஆக்கிரமிப்புக்கு பலியாகியிருகின்ற ஒரு காலனிய அரைக்காலனிய நாடாக சீனா இருக்கிற காரணத்தால் சீனத்தின் தேசிய முதலாளி ஒரு குறிப்பிட்ட அளவு ஒரு குறிப்பிட்ட சமயங்களில் புரட்சிகர குணாம்சமுடையதாக விருக்கின்றது என்கிறார். தோழர் ஸ்டாலின் கூறுவதாவது, "இங்கே ரஷ்யாவில் 1905ல் ஒரு முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சியாக அதிருந்த உண்மையிலிருந்துமே முதலாளிக்கெதிராக, லிபரல் முதலாளிக்கெதிராக புரட்சி வழி நடத்தப்பட்டது" என்கிறார். (on the opposition, p. 774) வேறோர் இடத்தில் 'சீனாவில் ஒரு முதலாளித்துவப் புரட்சி நடக்கிறதென எதிரணி கேள்விப்பட்டுள்ளது. முதலாளிகளை எதிர்த்தே ரஷ்யாவில் முதலாளித்துவப் புரட்சி நடந்ததென்றும் மேலும் அது அறிகிறது. எனவே, சீனாவிற்கு தயார் சூத்திரத்தை கூறுகிறது. முதலாளிகளுடனான எல்லா கூட்டு நடவடிக்கைகளும் ஒழிக (ஏப்பிரல் 1926) கோமிண்டாங்கிலிருந்து கம்யூனிஸ்டுகள் உடனடியாகப் பின் வாங்குவது நீடு வாழ்க என்கின்றது' என (on the opposition p.736) கூறுகிறார். மேற்கு ஐரோப்பிய ஜனநாயக புரட்சிகளின் அனுபவத்தைக் கிரகித்து ரஷ்ய முதலாளிகள் ஆட்சியில் உள்ள நிலபிரபுக்களைக் கண்டு அஞ்சுவதை விட தொழிலாளிகளையும் மக்களையும் கண்டே அதிகம் அஞ்சியது. நிலபிரபுத்துவ ஆட்சியைக் கட்டிக் காக்கவே பாடுபட்டது. எனவே, ரஷ்யாவில் ஒடுக்கப்படும் தேசிய இன முதலாளி முன்வைத்த தனிநாடு கோரிக்கை நிலபிரபு ஆட்சியைத் தூக்கியெறிவதை நோக்கமாகக் கொண்டதல்ல. மாறாகப் பல்வேறு தேசிய இனத் தொழிலாளிகளையும் பிளவுபடுத்துவதை மட்டுமே ஒரே நோக்கமாகக் கொண்டது. அக்காரணத்தினாலேயே தோழர் லெனின் ஒடுக்கப்படும் தேசிய இனங்களின் 'தனிநாடு' கோரிக்கையை எதிர்த்தார். தேசிய இனப் பிரச்சினை பாட்டாளி வர்க்கத்திற்கு

முக்கியமானது அல்ல என்று வலியுறுத்தினார். தேசிய இனங்களின் சுயநிர்ணய உரிமை என்ற பொதுவான உத்திரவாதமே போதுமானதென்றார். ஆனால் நமது வறட்டுச் சூத்திரவாதிகள் ரஷ்யாவுக்காகச் சொல்லப்பட்டதை பிடித்துத் தொங்கிக் கொண்டு இந்தியாவிலும் அதையே ஒப்பிக்கின்றனர். அதனை எதிர்த்துத்தான் தோழர் மாவோவும் ஸ்டாலினும் சீன தேசிய முதலாளிக்கு புரட்சியில் பங்கெடுக்கும் புரட்சிகர பாத்திரமிருக்கிறதென கூறி சீனப் புரட்சியின் வெற்றிக்கு காரணமான மூன்று மந்திரக் கோல்களில் ஒன்றான ஐக்கிய முன்னணியை வலியுறுத்தினர். இந்தியாவிலோ ஒடுக்கப்பட்ட தேசிய இனங்களின் தேசிய முதலாளிகள் பிற்போக்கு வர்க்கங்களைக் கட்டிக் காக்கவில்லை. மாறாக முப்பதாண்டிற்கும் மேலாக உறுதியாக நின்று ஆயுதப் போராட்டத்தை விடாப் பிடியாக நடத்திக் கொண்டிருக்கின்றனர். சமீபத்தில் 1984 பிப்ரவரியில் காஷ்மீர் தேசிய விடுதலை முன்னணியின் தலைவர் மக்பூல்பட் தூக்குமேடை செல்லவும் தயங்கவில்லை. 60 ஆண்டுகளுக்கும் மேலாக வறட்டுச் சூத்திரம் பேசி துரோகமிழைக்கும் திரிபுவாத தத்துவவாதிகளை விட கூடுதலாகவே தேசிய முதலாளிகள் ஆயுதப் போராட்டம் நடத்தி அர்ப்பணித்திருக்கின்றனர். எனவே, மாவோ சிந்தனையிலும் சீனப்பாதையிலும் நாம் செல்வது உண்மையெனில் ஐக்கிய முன்னணி மந்திரக்கோலை செயற்படுத்துவது உண்மையெனில் நாமும் இந்த ஜனநாயகச் சக்திகளுடன் சேர்ந்து ஐக்கிய முன்னணி கட்ட வேண்டும். **தேசிய இன விடுதலையில் அல்லாது வேறெந்த வழியிலும் இந்தியாவில் ஐக்கிய முன்னணி கட்ட இயலாது.**

மூன்றாவதாக ரஷ்ய சமூகம் ஒடுக்கும் தேசிய இனத்திலும் சரி ஒடுக்கப்படும் தேசிய இனத்திலும் சரி தொழில் வியாபாரம் வளர்ச்சி பெற்றிருந்தது. பலவீனமான ஏகாதிபத்தியம் என்னும் அளவிற்கு இருந்தது. இத்தகையை முதலாளித்துவ வளர்ச்சி பெற்ற ஒரு நாட்டில் முதலாளித்துவ உற்பத்தியின் நெருக்கடி காரணமாக ஒருசில ஆண்டுகளுக்கு ஒருமுறை நெருக்கடி தோன்றுவதும் நாடு தழுவிய ரீதியில் மக்களை புரட்சிக்கு உந்தித் தள்ளுவதும் இயல்பானது.

எனவே, ரஷ்ய ஜனநாயகப் புரட்சி ஒரே நேரத்தில் நாடு தழுவிய ரீதியில் மக்கள் எழுச்சி, ஆயுத எழுச்சியாக வளர்ந்து மக்கள் ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றியது நடந்தேறியது. பின்தங்கிய அரைக்காலனித்துவ நாடான இந்தியாவில் புரட்சியென்பது ஒரே நேரத்தில் நாடு தழுவிய ரீதியில் ஏற்படக் கூடிய ஒன்றல்ல. ஏனெனில் ஏற்றத்தாழ்வான வளர்ச்சியின் காரணமாக பொருளாதார ரீதியிலும், அரசியல் ரீதியிலும் ஒருபகுதி மக்களின் வளர்ச்சியும் இன்னொரு பகுதி மக்களின் வளர்ச்சியும் சமமாக இருக்காது. எனவே அரசியல் எழுச்சியும் ஏற்ற இறக்கமாக முன் பின்னாகத்தான் இருக்கும். எனவே நீண்டகால ஆயுதப் போராட்டம் பகுதி பகுதியான விடுதலை என்பதால் சீனத்தில் தேசிய இனப் பிரச்சினை சாராம்சத்தில் இல்லாததால் அதன் வழிப்படி இல்லாமல் இந்தியாவில் தேசிய இனப் பிரச்சினை ஒரு முக்கிய பிரச்சினையாகவும் ஒடுக்கப்படும் தேசிய இனங்கள் விடுதலைப் போராட்டம் முன்னுக்குச் செல்வதாலும் ஒரு தேசிய இனமோ சில தேசிய இனங்களோ தனித்தோ சேர்ந்தோ விடுதலை பெறுவது சாத்தியம். இவ்விடுதலை நாடு தழுவிய ரீதியில் புரட்சியை துரிதமாக அபிவிருத்தியடையச் செய்து இறுதியில் இந்தியா முழுமையும் ஏகாதிபத்தியங்களின் இந்திய ஆளும் வர்க்கங்களின் பிடியிலிருந்து விரைவாக விடுதலை பெற உதவும். கிராமப்புறப் பகுதியிலிருந்து நகர்ப்புறங்களை நோக்கியும் ஒடுக்கப்படும் தேசிய இனங்களிலிருந்து ஒடுக்கும் தேசிய இனம் நோக்கியும் புரட்சியின் திசை செல்வது இந்தியாவில் தவிர்க்க முடியாதது. முதலில் விடுதலை பெறும் தேசிய இனங்கள் பிற தேசிய இன விடுதலைக்குத் தளமாக அமைந்து நாடு தழுவிய புரட்சிக்கு தூண்டுகோலாக அமையும். ஏகாதிபத்திய ஆட்சியின் விளைவாக தேசிய இனங்களுக்கு இடையும், தேசிய இனங்களுக்குள்ளும் ஏற்றத்தாழ்வான வளர்ச்சி ஏற்பட்டுள்ளதனால் பரஸ்பர சந்தேகம் கொள்ளுதல் பரஸ்பர நம்பிக்கையின்மை என்பது அடிப்படை அம்சமாக ஆகியுள்ளது. அதைப் போக்குவது என்பது அத் தேசிய இனத்தின் நியாயமான ஜனநாயக கோரிக்கைகளை (தனிநாடு கோரிக்கை உட்பட) அங்கீகரிப்பதன் மூலமும், அதன் மீதான ஒடுக்குமுறைகளை எதிர்த்து பரஸ்பரம் போராடுவதன் மூலமும் மட்டுமே

முடியும். சந்தேகம் நீங்கி நம்பிக்கை வளர வளரவே விருப்ப பூர்வமாக ஒன்று பட்டு போராடுவதும், புரட்சிக்குப் பின்னரும் ஒன்றுபட்ட ஜனநாயக ஆட்சியை ஏற்படுத்துவதும் சாத்தியம். புரட்சிக்கு முன்னரோ பின்னரோ எந்த தேசிய இனமும் பிரிவதற்கும் உத்திரவாதம் அளிப்பதன் மூலமே இது சாத்தியம்.

நான்காவதாக ரஷ்யப் புரட்சியில் பிரதான போராட்டச் சக்தியான பாட்டாளி வர்க்கம் இயக்கம் பிரதானமாக ஒடுக்கும் தேசிய இனத்தில்தான், ரஷ்ய தேசிய இனத்தில்தான் இருந்தது. பிற தேசிய இனத்திலிருந்த பாட்டாளி வர்க்கத்திற்கு முன்னோடியாக நின்று பிற தேசிய இனங்களை ஒடுக்கும் ஜார் அரசை எதிர்த்துப் போராடியது. இன ஒடுக்குமுறையை எதிர்த்துத் தீவிரமாக போராடிய ஒரே சக்தி ருஷ்ய தேசிய இன பாட்டாளி வர்க்கம்தான். அதனால்தான் பிற தேசிய இனங்களின் பிரச்சினைக்குச் சரியான தீர்வையும் வைத்தது. எல்லாத் தேசிய இனங்களுக்கும் சுயநிர்ணய உரிமை உண்டு என்று வாதாடியது. ஜார் அரசைத் தூக்கியெறிந்த பின்னர் அந்தந்த தேசிய இனங்கள் தங்கள் விருப்பப்படி பாட்டாளி வர்க்க ரஷ்யக் குடியரசில் இணைந்து வரவோ, தனித்துப் பிரிந்து செல்லவோ செய்யலாம் என்ற உத்தரவாதம் தந்தது. அன்றைய சர்வதேசக் கம்யூனிஸ்டு இயக்கத்திலும் சரி, ரஷ்ய கம்யூனிஸ்டு இயக்கத்திலும் சரி இதனை கடுமையாக எதிர்த்த எதிர்ச் சக்திகளும் இருந்தன. புரட்சிக்குப் பின்னர் சோசலிச சமூகத்தில் தேசிய இனங்கள் பிரிந்து செல்லக் கூடாது என்றனர். தேவையில்லை என்றனர். ரஷ்ய கம்யூனிஸ்ட் கட்சியின் வழிகாட்டுதல்தான் இன்றைய ரஷ்ய தேசிய இனங்களின் ஒன்றுபட்ட கூட்டாட்சிக்கு வழிகோலியது.

ஆனால் இந்தியாவில் பாட்டாளி வர்க்க இயக்கம் என்பது ஒடுக்கப்படும் தேசிய இனங்கள் மத்தியில்தான் உள்ளது. ஒடுக்கும் தேசிய இனமான இந்தி தேசிய இனத்தில் பாட்டாளி வர்க்க இயக்கம் என்பது குறிப்பிடத்தக்க நிலையில் இல்லை. ஒடுக்கப்படும் பல்வேறு தேசிய இனங்கள் நீண்ட காலமாக விடுதலை கோரி, உரிமைகள் கோரிப் போராடுகின்றன. இந்திய அரசின் ஒடுக்கு முறையினால்

இறந்து மடிகின்றன. இனப் படுகொலைகள் நடந்து வருகின்றன. ஆனாலும் இன்றுவரை ஒடுக்கும் இந்தி தேசிய இனத்திலுள்ள ஜனநாயக சக்தியோ சோசலிச சக்தியோ எதுவும் கண்டனமோ, எதிர்ப்போ தெரிவித்தது இல்லை. இந்நிலையில் ஒடுக்கும் இந்தி தேசிய இனத்திலிருந்து வலுவான ஜனநாயக சோசலிச சக்தி தோன்றி வலுப்பெற்று இன ஒடுக்குமுறையை எதிர்க்கும் வரை தடுக்கும் வரை ஒடுக்கப்படும் தேசிய இனங்கள் இறந்து மடிய வேண்டுமா? போராடுவதை நிறுத்திக் கொள்ள வேண்டுமா? அவர்கள் போராடி விடுதலை பெறுவது இந்திய அரசைப் பலவீனப் படுத்தவே செய்யும். பிற தேசிய இனங்கள் விரைவில் விடுதலை பெறுவதற்கு அது உதவியாக இருக்குமே தவிர எதிராக இருக்காது. இந்திய நிலைமைகளில் சரியானதும் சாத்தியமானதும் இவ்வழிதான். எல்லாத் தேசிய இனங்களும் சேர்ந்து போராடுவதை நாம் எவ்விதத்திலும் எதிர்க்கவில்லை. சேர்ந்து போராடும் போதே தேசிய இன விடுதலைப் போராட்டங்களை முன்னெடுக்க வேண்டும் என்பதையும், ஒரு தேசிய இனமோ சில தேசிய இனங்களோ விடுதலை பெறுவது சாத்தியமெனில் அதை நடைமுறைப்படுத்த வேண்டும் என்பதே. ஒரு தேசிய இனமோ சில தேசிய இனங்களோ தனித்தோ சேர்ந்தொ விடுதலையடையும் வாய்ப்புகளே அதிகம். இவற்றின் வெற்றி நாடு முழுவதின் விடுதலையை விரைவுபடுத்தும். அப்படிப்பட்ட விடுதலைக்காக விருப்பபூர்வமாக ஒன்றுபட்டுப் போராடுவோம். ஒன்றுபட்ட இந்தியக் கூட்டாட்சி அமைத்துக் கொள்வோம். ஏகாதிபத்தியங்கள் உள்ள சூழ்நிலைமையில் இந்தியாவின் பல்வேறு தேசிய இனங்கள் ஒன்றுபட்டு ஒரு கூட்டாட்சியில் நிற்க வேண்டியதன் அவசியத்தைப் பிரச்சாரம் செய்வதை இது தடுத்து விடவில்லை. ஆனால் ஆளும் வர்க்கங்களின் ஐக்கிய தேசம் என்ற கோஷத்தை நாம் எதிர்க்கிறோம். பாட்டாளி வர்க்கத் தலைமையில் இல்லாமல் பிற வர்க்கங்களின் தலைமையில் தேசிய இனங்கள் பிரிந்து சென்றால் எதிர்காலத்தில் ஒன்று சேரவும் மறுக்கலாம். எனவே, பாட்டாளி வர்க்கம் தேசிய விடுதலைக்குத் தலைமை தாங்கும் போது மட்டுமே எதிர்காலத்தில் ஒன்றுபட்ட இந்தியா சாத்தியம். விரைவில் இந்திய மக்களின் விடுதலை சாத்தியம். இல்லையெனில்

இன்னும் நீண்ட காலத்துக்கு மக்களின் விடுதலை இயக்கம் முன்னுக்குச் செல்லப் போவதும் இல்லை. விடுதலையும் சாத்தியமில்லை. ஒன்றுபட்ட இந்தியாவும் எதிர்காலத்தில் இல்லை.

ஐந்தாவதாக மகாபீட்டர் காலத்திலிருந்து ரஷ்யாவில் பல்வேறு தேசீய இனங்களும் ஒன்றுபட்ட நிலபிரபுத்துவ பேரரசின் கீழ் வாழ்ந்து வந்தவை. இந்தியாவில் ஒன்றுபட்ட ஒரே அரசின் கீழ் எப்பொழுதுமே இருந்ததில்லை. வெள்ளை ஏகாதிபத்தியம்தான் பெரும்பான்மை இந்தியப் பகுதிகளை இணைத்து ஒரே அரசு நிர்வாகத்தின்கீழ் கொண்டு வந்தது. 1947க்குப் பின்னர்தான் பலாத்காரமாக பல்வேறு மொழி, கலாச்சார மக்களும் ஒன்றுபடுத்தப்பட்டனர். இன்றைய இந்தியா பிரிட்டன் ஏகாதிபத்தியத்தாலும், இந்திய ஆளும் வர்க்கங்களினாலும் மக்களின் விருப்பத்திற்கெதிராக ஒருங்கிணைக்கப்பட்டிருக்கிறது. தேசீய இன எழுச்சிகளும், போராட்டங்களும் வீறு கொண்டெழுவதற்கு இது ஒரு முக்கிய காரணியாக இருக்கிறது. பல்வேறு மொழி, கலாச்சாரம் கொண்ட மக்களின் உணர்வுகளை மதிக்கிறோமோ அல்லது ஏகாதிபத்தியவாதிகள் போல் இந்திய ஆளும் வர்க்கங்கள் போல் வறட்டுத்தனமாக மார்கசியம் பேசி மறுக்கப்போகிறோமா? தோழர் ஸ்டாலின் ரஷ்யாவில் உள்ள தேசீய இனங்கள் பற்றிக் குறிப்பிடும்போது, 'எனவே ஆஸ்திரியாவில் தேசீயப் பிரச்சினை என்பது அரசியல் வாழ்க்கையில் பிரதானமான அம்சமாகவும் முக்கிய பிரச்சினையாகவும் உள்ளது. ரஷ்யாவில் நிலைமை அதுமாதிரி இல்லை....முக்கியமானதாகவும் உள்ள விசயம் என்னவென்றால் தேசியப் பிரச்சினையென்பது ரஷ்ய அரசியல் வாழ்க்கையின் பிரதான அம்சமாக இல்லை' (மார்க்சியமும் தேசிய இனப் பிரச்சினையும் பக். 39) எனவும் 'ரஷ்யாவின் வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டத்தையும் நிர்ணயிப்பது தேசிய இனப் பிரச்சினையல்ல' (அதே நூல் 41) எனவும் குறிப்பிடுகிறார். எனவே, தேசீயப் பிரச்சினை ஒரு முக்கியமான பிரச்சினையாகக்கூட அரசியல் வாழ்வில் இல்லாத ரஷ்ய நாட்டுக்காகக் கூறப்பட்ட ஒருமைப்பாட்டுத் தீர்வாகும் என்பது எப்படிப் பொருந்தும். எனவே, ரஷ்ய நிலைமையும் இந்திய நிலைமையும் வெவ்வேறு. தீர்வுகளும் வெவ்வேறானவையாகவே இருக்கும்.

## சீனத் தீர்வே இந்தியத் தீர்வாக முடியுமா?

*சீன இந்திய நிலைமைகளை ஒப்பிட்டால் முதலாவதாக சீன மக்களில் ஏக பெரும்பான்மையும், 94 சதவீதம் ஒரே சீன மொழியைப் பேசும், ஒரே ஹான் தேசிய இனத்தைச் சார்ந்தவர்கள். இரண்டாவதாக சிறுபான்மை இனங்களை ஒடுக்கும் ஹான் தேசிய இனத்திலேயே பாட்டாளி வர்க்கக் கட்சி தோன்றி வலுவாக வளர்ந்த நிலையில் சிறுபான்மை இனங்களை ஒடுக்கும் தன் இன ஒடுக்குமுறையாளர்களை எதிர்ப்பவர்களாகி விட்டார்கள். தடுப்பவர்களாகி விட்டார்கள். ஒடுக்கும் இன மக்களே இன ஒடுக்கு முறையைத் தடுக்கும் நிலையிலிருக்கும் பொழுது ஒடுக்கப்படும் இனங்கள் அதற்காகத் தனி முயற்சிகள் எடுக்க வேண்டிய அவசியம் இல்லாமல் போய்விடுகிறது. மூன்றாவதாக சீனச் சமுதாயத்தில் தேசிய இன விடுதலைப் போராட்டங்கள் ஒரு முக்கியப் பிரச்சினையாக வளரவில்லை. ஏனெனில் அன்றைய சூழ்நிலைமைகளில் முதலாளித்துவ உற்பத்திச் சக்திகள் மிகவும் அருகியே வளர்ச்சி பெற்றிருந்ததால் தேசிய இன உருவாக்கம் ஏற்படவோ தேசிய இனங்களின் சுதந்திரமான வளர்ச்சிக்குத் தடங்கலாக இருக்கின்ற அரசை ஆளும் வர்க்கங்களைத் தூக்கியெறிய வேண்டும் என்ற அவசியமோ சிறுபான்மைத் தேசி இனங்களுக்கு ஏற்படவில்லை. மேலும் சீனத்தின் 6% சிறுபான்மைத் தேசிய இனங்கள், மிகப் பலவாக இருந்தன என்பது குறிப்பிடத் தக்கது. (1) மங்கோல், (2) ஹீஜ, (3) திபெத்தியன், (4) உய்குர், (5) மியாவோ, (6) யி, (7) சுஆங், (8) சுங்தியா, (9) கொரியன் என எண்ணற்ற பல்வேறு மிகமிகச் சிறுசிறு சமூகங்களாகவே பரவிக் கிடந்தனர். மிகச்சிறு அளவிலான பல்வேறு மக்கள் சமூகங்கள் மிகவும் பின்தங்கிய உற்பத்தி முறையில் இருந்து கொஞ்சமும் வளராத நிலையில் தேசிய உணர்வுகளோ தேசிய விடுதலைப் போராட்டங்களோ வளர்வதற்கு வழியில்லை. சீனச் சமூகத்தைக் குலுக்கும் ஒரு பிரச்சினையாகத் தோன்றவே இல்லை. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் முதல் சின் பேரரசர் ஒன்றிணைத்த காலத்திலிருந்து சீன வரலாறு என்பது பாரம்பரியமாக ஒன்றிணைந்த நிலைத்த நீடித்த வரலாறு உடையது.*

## ஆனால் இந்தியாவின் நிலைமை என்ன?

*1947* துவக்கம் முதலே அண்டை சமஸ்தான சிறுநாடுகள், தேசிய இனங்கள் இந்திய ஆளும் வர்க்கங்களால், அவர்களது அரசால் ஆக்கிரமிக்கப்பட்டு இன்றளவும் படுகொலை செய்யப்பட்டு வருகின்றன. காஷ்மீரும் நாகா மக்களும் அன்றிலிருந்து இன்றுவரை படுகொலை செய்யப்பட்டு வருகின்றனர். அப்பகுதிகள் இன்றளவும் யுத்தகளமாகவே நீடிக்கின்றன. இந்திய ஆளும் வர்க்கங்களின், ஏகாதிபத்தியவாதிகளின் சுரண்டலால் வளர்ச்சி குன்றி தேசிய உரிமைகளுக்காகத் தொடர்ந்து போராட்டங்கள் நடந்து வருகின்றன. மிஜோ, மணிப்புரி மக்கள் 1960களில்தான் 'தனிநாடு' கேட்கும்படி நிர்ப்பந்திக்கப் பட்டனர். தமிழ், அசாமி, திரிபுரி, பஞ்சாபி மக்கள் உரிமை கேட்டுப் போராடும்படி தள்ளப்பட்டனர். ஆந்திரர், கர்நாடகர் மத்தியில் எழுச்சிகள் தலைதூக்குகின்றன. பிராந்திய விடுதலைப் போராட்டங்களும் நடந்து வருகின்றன. இந்த தேசிய இனங்கள் உரிமைகள் கேட்டுப் போராடும் போது நீண்டகாலமாகப் படுகொலை செய்யப்பட்டு வருகின்றன. இவைகளைக் கண்டித்து ஒடுக்கும் இந்தி இனத்திலிருந்த எந்த ஜனநாயகச் சக்தியாவது எதிர்ப்புக் குரல் கொடுத்ததுண்டா? அவர்கள் உணர்வு பெற்று வரும்வரை மற்ற ஒடுக்கப்படுகின்ற தேசிய இனங்கள் செத்து மடிய வேண்டுமா? அவர்கள் விடுதலை பெறுவதைத் தடுப்பது நியாயமாகுமா? ஒடுக்கப்படும் தேசிய இனங்கள் சேர்ந்தோ தனித்தோ இனவிடுதலை பெற ஒன்று படுவதற்கும், விருப்பபூர்வமாக இணைந்து போராடுவதற்கும், வெற்றிக்குப் பின்னால் கூட்டாட்சி அமைக்கவும், தடையேதுமில்லையே. சமூக வளர்ச்சி உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சி எப்பொழுதுமே தனித்த நிலையிலிருந்து ஒன்று படுத்தும் நிலைக்குத்தான் மக்களைக் கொண்டு வருகிறது. இது புறநிலை சமூக வளர்ச்சியின் அவசியம். இதற்கு எதிராக மக்களைப் பிளவுபடுத்தல் இயலாது. பல்வேறு தேசிய இனங்களும் விருப்ப பூர்வமாக ஒன்றிணைவதுதான் தேசிய இனங்களின் தனிப் பண்புகள் குறைந்து சர்வதேச உணர்வுகள் வளர வழிவகுக்கும். இன்றிருப்பதோ பல்வேறு தேசிய மக்களின் விருப்பத்திற்கு எதிரான ஐக்கியமே. இந்த

ஐக்கியத்தை சிதையாமல் அப்படியே திருப்பிப் பெற வேண்டும் என நினைப்பது எதார்த்தத்திற்கு முரணானது. அவர்களின் உரிமைகளுக்காகப் போராட முன்வராவிடில் நாளைக்கு ஐக்கியப்படுத்த நம்மால் முடியாது. நாம் ஐக்கியப்படுத்துவது என்பது மக்களின் உணர்வுகளுக்கு மதிப்பளிப்பதாக இருந்தால் மக்கள் நம்பிக்கையை நாம் பெற்றிருக்க வேண்டும்.

இந்தியாவின் 70 சதவீதத்திற்கும் அதிகமான பிற சிறு தேசிய இனங்களை அவர்களின் நியாயமான பிரச்சினைக்குத் தீர்வு காணாமல் புறக்கணித்து விட இயலாது.

நான்காவதாக 1911க்குப் பின்னர் சீன அரசு என்பது சிறுசிறு படைகளை உடைய யுத்தப் பிரபுக்களும், அவர்களுக்கிடையில் இடைவிடாத யுத்தங்களும் நடந்த நிலையில் பலவீனமாக இருந்தது. சாலை, ரயில் பாதைகளோ, நவீன போக்குவரத்துச் சாதனங்களோ, நவீன தகவல் தொடர்பு வசதிகளோ, நவீன ஆயுதங்களோ இல்லை. முதலாளித்துவ ஒன்றிணைக்கப்பட்ட தொழில் வியாபார பொருளுற்பத்தி மேலோங்கி இல்லாமல் விவசாய பொருளுற்பத்தியே நீடிக்கையில் நாடு முழுவதும் சமச்சீரான இயக்க வளர்ச்சி ஏககாலத்தில் ஏற்படாமல் முன் பின்னாகவே ஏற்பட்டது. இருந்துமே ஒரே மொழி இன கலாச்சாரமுடைய மக்களென்பதால் தளபிரதேசம் சுற்றி வளைக்கப்படுகையில் 7000 மைல் பின்வாங்கி நீண்ட பயணம் நடத்தி தப்பிக்க முடிந்தது. ஆனால் இந்திய அரசோ புரட்சிக்கு முந்திய சீன அரசை விட மிகப் பலமானது. நவீன ஆயுதங்களுடன், எல்லா வசதிகளுடன் ஒன்றிணைக்கப்பட்டு ஒருமுகப் படுத்தப்பட்டுள்ளது. சீனத்தைப் போன்றே இந்தியாவும் விவசாய பொருளுற்பத்தி மேலோங்கியிருப்பதாலேயே சீனத்தின் நீண்ட யுத்தப் பாதையை நாம் கைக்கொண்டிருக்கிறோம். சீனத்தைப் போன்றே இந்தியாவிலும் சமச்சீரற்ற ஏற்றத்தாழ்வான வளர்ச்சி நிலைமையில் இயக்க வளர்ச்சி நாடு முழுவதும் ஏக கட்டத்தில் சமமாக ஏற்பட முடியாதென்பதற்கு 1967இல் துவங்கிய நக்சல்பாரி எழுச்சியால் ஒருவர் கூட இன்றுவரை ஈர்க்கப்படாத குஜராத், ராஜஸ்தான் மாநிலங்களே நிரூபணங்களாக உள்ளன. இந்நிலையில் பலமொழி இனக்

கலாச்சாரத்தால் குறுக்கப்பட்டுள்ள நிலையில் பலமான அரசை முறியடிப்பதென்பது தேசிய இனத்தை ஒட்டுமொத்தமாக திரட்டி நிறுத்துவதன் மூலம் மட்டுமே முடியும். சீனாவைப் போல் கட்சி இல்லாத பகுதிகளுக்கும் பின்வாங்கித் தப்பிப்பது சாத்தியமில்லை. பலமொழி இன கலாச்சார நிலைமையில் பல்லாயிரவர், பல்லாயிரம் மைல் பின்வாங்கி மக்களுடன் மீனும் நீரும் போல் இரண்டறக் கலப்பது சாத்தியமில்லை. எனவே, தேசிய இனங்களைத் திரட்டி நிறுத்தியே எதிரியின் பல இனப் படையிலும் பிளவை உண்டாக்க முடியும். 'தாய்நாட்டைக் காப்போம்' என்ற முழக்கம் சீனப் புரட்சியை எளிதாக்கியது போன்று 'தேசிய இனத்தை விடுவிப்போம்' என்பதே இந்தியப் புரட்சியை எளிதாக்கும்.

## இருவேறு தவறான போக்குகள்

ஒரு போக்கினர் ஒவ்வொரு தேசிய இனத்தையும் ஒரு காலனியாகவும் மத்திய அரசை ஒரு துணை வல்லரசாகவும் பார்க்கின்றனர். எனவே, தேசிய இனம் முழுவதையும் திரட்டி தேச விடுதலை யுத்தம் நடத்துவது ஒன்றே அனைத்திற்கும் தீர்வு எனப் பார்க்கின்றனர். அதாவது நிலப் பிரபுத்துவத்துக்கும் பரந்துபட்ட மக்களுக்கும் இடையிலான முரண்பாடோ அந்நிய ஏகாதிபத்தியங்களுக்கும் இந்திய மக்களுக்கும் இடையிலான முரண்பாடோ தேசிய இனத்துக்கும் மத்திய அரசுக்கும் இடையிலான முரண்பாட்டில் உள்ளடங்கி விட்டது என்கின்றனர். அதாவது இம்முரண்பாட்டைத் தீர்த்தாலே அவைகள் தீர்ந்து விடும் என்கின்றனர். உழவர் புரட்சி நடத்தித் தீர வேண்டியதன் கட்டாய அவசியத்தைக் காண மறுக்கின்றனர்.

ஒரு அடிப்படை முரண்பாட்டின் தீர்வு எப்போதுமே மற்ற அடிப்படை முரண்பாட்டின் தீர்வாகி விடமுடியாது. தனித்தும் அடிப்படைத் தீர்த்துவிட முடியாது. முதன்மை முரண்பாட்டின் தீர்வு மற்ற அடிப்படை முரண்பாட்டின் தீர்வுக்கு வழியுண்டாக்கும்,. எளிதாக்கும், சாத்தியமாக்கும். ஆனால் அதுவே தீர்த்து விடாது. உழவர் புரட்சி இணைக்கப்படாத ஒரு ஜனநாயகப் புரட்சி இன்றைய

நிலையில் சாத்தியமில்லை. காரணம் பின்தங்கிய நாடுகள் எல்லாவற்றிலுமே பெரும்பான்மையோர் விவசாயிகள். அப்படியிருக்க விவசாயிகள் பிரச்சினையான நிலப்பிரச்சினை சாராம்சத்தில் தீர்க்கப்படாமல், உழவர் புரட்சி நடந்தேறாமல் ஒரு சமூக மாற்றம் என்பது சாதிக்க இயலாது. அதை ஒரு அடிப்படை முரண்பாடாகவும் அகில இந்திய ரீதியில் தீர்க்கப்பட வேண்டியதாகவும் பார்க்காமல் தேசிய இனப் பிரச்சினை ஒன்றை மட்டுமே இப் போக்கு ஒரே பிரச்சினையாகப் பார்க்கிறது. எனவே இது உழவர் புரட்சியின் முக்கியத்துவத்தை புறக்கணிக்கும் போக்காகவே தென்படுகிறது.

மேற்கு ஐரோப்பிய முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சிகளிலிருந்து பாட்டாளி வர்க்கத் தலைமையிலான ரஷ்ய ஜனநாயகப் புரட்சியை வேறுபடுத்தும் அம்சமாக உழவர் பிரச்சினையை லெனின் கூறுகிறார். "கடுமையான உழவர் பிரச்சினையே இந்தப் புரட்சியை வேறுபடுத்திக் காட்டும் முக்கியமான அம்சமாகும். இக்காரணத்தினாலேயே உழவர் பிரச்சினை அதாவது நிலத்துக்காக நிலவுடைமையாளர்களை எதிர்த்து உழவர்கள் நடத்தும் போராட்டம், இப்போதைய புரட்சியின் உரைக்கற்களில் ஒன்றாக நிரூபிக்கப்பட்டுள்ளது" என்கிறார். (லெ.தொ.நூ. 12, பக். 458)

இதைப் போன்றே இப்போக்கினர் மத்திய அரசை ஒரு துணை ஏகாதிபத்தியம் என கூறுவது தவறானது. இந்தி தேசிய இன சுதந்திர ஆளும் இனமல்ல என்பதைக் காணத் தவறுகின்றனர். அதன் பின்னால் உள்ள ரஷ்ய அமெரிக்க ஏகாதிபத்தியங்கள், பிற இரண்டாந்தர ஏகாதிபத்தியங்கள் இந்தியாவை கொள்ளையடிப்பதையும் அந்த அடிப்படை முரண்பாட்டைத் தீர்த்தாக வேண்டியுள்ளது என்பதையும் காண மறுக்கின்றனர். இந்த இரண்டு முரண்பாடுகளே இன முரண்பாட்டிற்கு உட்பட்டது எனக் கூறி மத்திய அரசுக்கும் தேசிய இனத்துக்கும் இடையிலான முரண்பாடு ஒன்றை மட்டுமே தீர்க்க வேண்டு மென்றனர். இது ஒன்றையே தீர்க்க வேண்டுமென்றதால் அகில இந்திய கம்யூனிஸ்டு கட்சி கட்ட வேண்டியதின் அவசியத்தையே மறுக்கின்றனர். தனது விடுதலையை மட்டுமே நோக்காகக் கொண்ட தேசிய

முதலாளிகளின் தேவைகளுக்கேற்ப பாட்டாளி வர்க்கக் கட்சியை வெட்டிக் குறைப்பதாகும். இது ஒரு அரசின் எல்லைக்குள் வாழ்வதால் பல்வேறு தேசிய இனங்களையும் ஒன்று திரட்டி போராடுவதன் அவசியத்தை உணர்த்த வேண்டுமெனவும் பல்வேறு தேசிய இனங்களையும் ஒன்றுபடுத்த, ஒன்றுபட்ட ஒரு புரட்சிகரக் கட்சி அவசியமென லெனின் சுட்டிக் காட்டுவதை மறந்து விடக் கூடாது.

மறுபோக்கினர் இது ஒரு பிரச்சினையே தவிர ஒரு அடிப்படை முரண்பாடே அல்ல என்கின்றனர். இந்தப் பிரச்சினையும் தற்காலிகமானதே நீடித்ததல்ல என்கின்றனர். அதுவும் இலங்கைக்கு மட்டும் உரியது இந்தியாவுக்கு அல்ல என்கின்றனர். வேறு சிலர் இது வர்க்கப் போராட்டமே அல்ல என்கின்றனர். இது தேசிய முதலாளிகளது பிரச்சினை என்பதால் பாட்டாளி வர்க்கம் தலைமைத் தாங்கக் கூடாது, மற்றவர்கள் நடத்தினால் ஆதரிக்க மட்டுமே செய்யலாம் என்கின்றனர். இவர்கள் அனைவருமே ஸ்தூலமான மூன்றாம் உலக நாடுகளில் உலகந்தழுவி பல தேசிய இனங்கள் உள்ள நாடுகள் பலவற்றிலும் நடந்து கொண்டிருக்கும் இதன் முக்கியத்துவத்தை மறுக்கின்றனர். அரைக்காலனி அரை நிலப்பிரபுத்துவ சமூக அமைப்பு இருக்கையில் ஜனநாயகப் புரட்சி என்பது விவசாயிகள் புரட்சி என்ற ஒரு வடிவத்தை மட்டுமே எடுக்கும் என இவர்கள் கருதுவதால் சீனத்தின் விவசாயப் புரட்சி வடிவம் மட்டுமே இவர்களுக்குத் தெரியும் என்பதால் ரஷ்யாவின் தேசிய இன ஒருமைப்பாடு வாய்பாட்டையும் சீனத்தின் விவசாயப் புரட்சியின் வாய்பாட்டையும் மட்டுமே ஒப்பிடக் கூடிய வறட்டுச் சூத்திரவாதிகள் இவர்கள். ரஷ்ய ஜனநாயகம் புரட்சியிலிருந்து வேறுபட்டு, 'தேசீய விடுதலை யுத்தம்' என்ற தனித்தன்மையை எப்படிச் சீன ஜனநாயகப் புரட்சி எடுத்ததோ அதைப் போல சீன ஜனநாயகப் புரட்சியிலிருந்து வேறுபட்டு 'தேசீய இனவிடுதலை யுத்தம்' என்ற தனித்தன்மையை இந்திய ஜனநாயகப் புரட்சி எடுப்பதை இவர்கள் அனைவருமே காண மறுக்கின்றனர். முதல் போக்கினர் எப்படி இன முரண்பாட்டிற்கு உட்பட்டதாக இரு அடிப்படை முரண்பாடுகளையும்

பார்க்கின்றனரோ அதைப் போல இவர்களும் சீனத்திலிருந்த அந்த இரண்டு அடிப்படை முரண்பாட்டிற்கும் உட்பட்டதாகவே இதைப் பார்க்கின்றனர். உட்பட்டது எனில் அடங்கிப் போய் விட்டது என்கின்றனர். இந்த இரண்டின் தீர்வு இன முரண்பாட்டைத் தீர்த்து விடும் என்கின்றனர்.

அடிப்படைத் தன்மையுள்ள இன முரண்பாட்டின் தீர்வு மற்ற இரண்டு அடிப்படை முரண்பாடுகளையும் தீர்த்துவிடும் என்பதோ, இரண்டு அடிப்படை முரண்பாடுகளின் தீர்வு அடிப்படைத் தன்மையுள்ள இன முரண்பாட்டைத் தீர்த்து விடும் என்பதோ தவறானது. எந்த முரண்பாட்டின் தீர்வும் எதையும் தீர்த்து விடக் கூடிய நிலையில் உள்ளவை அல்ல. இவைகளைத் தீர்த்தால் அது தீரும் என்பதோ, அதைத் தீர்த்தால் இவைகள் தீரும் என்பதோ அல்ல பிரச்சினை. அப்படித் தீர்க்கவும் முடியாது. தீரவும் தீராது.

"குணாம்ச ரீதியில் வேறுபட்ட முரண்பாடுகளை குணாம்ச ரீதியில் வேறுபட்ட முறைகளின் மூலம்தான் தீர்க்க முடியும். உதாரணமாக பாட்டாளி வர்க்கத்திற்கும் முதலாளித்துவத்திற்கும் இடையிலான முரண்பாடு சோசலிசப் புரட்சி வழிமூலம்தான் தீரும். நிலப்பிரபுத்துவத்திற்கும் பரந்து பட்ட மக்களுக்கும் இடையிலான முரண்பாடு ஜனநாயகப் புரட்சி வழி மூலம்தான் தீரும். ஏகாதிபத்தியத்திற்கும் காலனிக்கும் இடையிலான முரண்பாடு தேசிய புரட்சியுத்த வழி மூலம்தான் தீரும்." (முரண்பாடு பற்றி) என தோழர் மாவோ குறிப்பிடுவதை கவனித்தால் இது நன்கு தெரிய வரும். மூன்றுமே அடிப்படை முக்கியத்துவமுடைய சம முக்கியத்துவமுடைய நமது இந்தியாவின் இன்றைய மூன்று அடிப்படை பிரச்சினைகள். இந்த மூன்று அடிப்படைப் பிரச்சினைகளும் ஜனநாயக சாரத்தை உடையவையே. எந்த ஒன்றையும் தனித்துப் பிரித்துத் தீர்க்க இயலாது. மூன்றும் ஒன்றோடொன்று இணைந்தது. ஒன்றிலிருந்து மற்றொன்று பிரிக்க முடியாதது. இம்மூன்றுமே இந்திய சமுதாய வளர்ச்சியின் ஜனநாயக சாரத்தைத் தீர்மானிக்கும் மூன்று அடிப்படை முரண்பாடுகள். இந்த மூன்றின் தீர்வே இந்திய ஜனநாயகப் புரட்சியின் மூன்று உள்ளடக்கம். எனவே,

தேசிய இனங்கள் போராடுவதில் உள்ள நியாயத் தன்மையையும் ஜனநாயகத் தன்மையையும் அதில் இந்திய புதிய ஜனநாயகப் புரட்சியில் வகிக்கும் முக்கியத்துவத்தையும் அங்கீகரித்து உழவர் புரட்சியுடன் இணைப்போம். வறட்டுச் சூத்திரவாதிகளை முறியடிப்போம்.

தோழர் மாவோ கூறியுள்ளது போல், 'தேசியத் தன்மை வாய்ந்த ஒரு போராட்டத்தில் வர்க்கப் போராட்டம், தேசியப் போராட்டம், தேசியப் போராட்டம் இரண்டுக்கும் உள்ள ஒத்த தன்மையை மெய்ப்பிக்கின்றது". (மா.தொ.நூ. 2, பக். 215) என்பதை கவனித்தால் தேசிய இன விடுதலைப் போராட்டம் ஒரு வர்க்கப் போராட்டம் தழுவிய விஷயந்தான் என்பது தெரிய வரும். மேலும் தோழர் மாவோ குறிப்பிடும் மாபெரும் சீன தேசத்தின் பகுதியாகவும், அதன் சதையின் சதையாகவும் ரத்தத்தின் ரத்தமாகவும் உள்ள சீனப் பொதுவுடைமையாளர்களைப் பொறுத்தவரை சீனாவின் சிறப்பியல்புகளில் இருந்து தனிமையாக்கப்பட்ட மார்க்சியம் பற்றிப் பேசுவது எல்லாமே அருவமான மார்க்சியம் மட்டுமே ஆகும். எனவே, சீனத்தில் மார்க்சியத்தை திட்டவட்டமாகப் பிரயோகிப்பது அதன் ஒவ்வொரு வெளிப்பாடும் ஐயத்துக்கிடமில்லாத சீனத் தன்மையைப் பெறுவது அவசியம். அதாவது சீனாவின் குறிப்பிட்ட சிறப்பியல்புகளின் ஒளியில் மார்க்சியத்தைப் பிரயோகிப்பது ஒரு பிரச்சினையாகி உள்ளது. கட்சி முழுவதும் இதை விரைவாகப் புரிந்து தீர்வு காண வேண்டியுள்ளது. அந்நிய நாட்டு மாதிரிகள் ஒழித்துக் கட்டப்பட வேண்டும். பொருளற்ற அருவமான மெட்டுகளில் பாடுவதை நிறுத்த வேண்டும். வறட்டுவாதம் புதைக்கப்பட வேண்டும். அவற்றுப் பதிலாக சீனாவின் சாதாரண மக்கள் விரும்புகின்ற புத்தம் புதிய உயிருள்ள சீனப்பாங்கும் சீன உணர்வும் கொண்டு வரப்பட வேண்டும்" (மா.தொ.நூ.2, பக்கம் 209) என்பதையே திரும்பவும் சொல்ல விழைகிறோம். இந்தியாவின் ஸ்தூலமான யதார்த்த நிலைமைகளைக் கவனியுங்கள். அதற்கேற்ப மார்க்சியத்தைப் பிரயோகியுங்கள். வறட்டுத்தனமாகப் பிறநாட்டு மாதிரிகளைக் காப்பியடிக்காதீர்கள் என்பதே நமது நிலை.

## முன்னேறும் இனவிடுதலைப் போராட்டங்களும் நம் கடமையும்

வடகிழக்குப் பிராந்தியம் முழுவதிலும் தேசிய இன விடுதலைப் போராட்டங்களும், உரிமைகளுக்கான போராட்டங்களும் வெற்றிகரமான முறையில் நடந்து வருகின்றன. பாட்டாளி வர்க்கச் சிந்தாந்தத்தை ஏற்ற கட்சிகள் தலைமையில் அம்மக்கள் விடுதலை யுத்தம் நடத்தி வருகின்றனர். இந்திய அரசு அம்மாநிலங்களை யுத்த களமாக்கி அம்மக்களைப் படுகொலை செய்து ராணுவ ஆட்சி நடத்திக் கொண்டிருக்கிறது. அச்செய்தி வெளிமாநில மக்களுக்குத் தெரிய விடாமல் பத்திரிகைத் தணிக்கைகள் செய்து வருகிறது. பிறபகுதி மக்களோடு தொடர்புகள் இன்றித் துண்டிக்கப்பட்டுள்ளது. அம்மக்களைக் கிராமங்களை விட்டுத் துரத்தி ராணுவக் குடியிருப்புகளில் வாழும்படி கட்டாயப்படுத்தி வருகிறது. ஒவ்வொருவருக்கும் அடையாள அட்டை கொடுத்து பகலில் மட்டுமே, குறித்த நேரத்தில் மட்டுமே முகாமை விட்டு வெளியே செல்ல அனுமதிக்கிறது. இந்திய அரசுக்கு அவைகள் நிரந்தரமான கலவரப் பகுதிகளாகவே உள்ளன. ராணுவக் கட்டுப்பாட்டில் அப்பகுதிகள் நீடித்து இருந்து கொண்டிருக்கின்றன. எந்தவித விசாரணையுமின்றி சந்தேகப் படும் எவரையும் ராணுவம் படுகொலை செய்து கொண்டிருக்கிறது. எனவே அந்நாடுகளின் தனிநாட்டுக் கோரிக்கையை அங்கீகரிக்கும்படி கோருவதும் அங்குள்ள ராணுவத்தை வாபஸ் வாங்கும்படி கோருவதுமே உண்மையான சோசலிசவாதிகளின் ஜனநாயகவாதிகளின் கடமை.

காஷ்மீர் மக்களின் சுயநிர்ணய உரிமையை மறுத்து இந்திய ஆளும் வர்க்கம் அவர்களையும் அடிமைப்படுத்தி வைத்துள்ளது. அவர்களும் தொடர்ந்து காஷ்மீர் விடுதலை கோரிப் போராடி வருகின்றனர். அவர்களது மொழி இன கலாச்சாரத்தையும் மதத்தையும் காப்பாற்றிக் கொள்ள அவர்களும் தனிநாடு கோரிப் போராடி வருகின்றனர். இந்த ஆண்டு பிப்பிரவரியில் காஷ்மீர் தேசிய விடுதலை முன்னணியின் தலைவர் மக்பூல்பட்டை இந்திய ஆளும் வர்க்கம் தூக்கில் போட்டுள்ளது. ஆனாலும் அவர்களின் ஆயுதப் போராட்ட வெற்றியை எந்தச் சக்தியாலும் தடுக்க

முடியாது. அசாம், பஞ்சாப் தேசிய இன மக்கள் தங்களது நியாயமான கோரிக்கைக்காகப் போராடி வருகின்றனர். இந்திய மக்களின் விடுதலைக்கு இப்போராட்டங்கள் முக்கியமான பாத்திரத்தை வகிக்கின்றன. அப்போராட்டங்கள் வெற்றி பெற உதவுவோம். மற்றும் 'ஜார்கண்ட்', 'சதீஸ்கர்', 'விதர்பா' பகுதி மக்கள் தனி மாநிலம் கேட்டுப் போராடுகின்றனர். அம்மக்களின் நியாயமான கோரிக்கைகள் நிறைவேற உதவுவோம்.

## தமிழ் தேசிய இனம்

தமிழ் தேசிய இனம் தொன்மையும் வரலாற்றுச் சிறப்பு மிக்க ஒன்று. உலகின் பல தேசிய இனங்கள் போன்றே இதுவும் பல வரலாற்று வளர்ச்சிகளைக் கடந்து வந்திருக்கின்றது. இந்திய மக்கள் சமூகம் பல்வேறு வெளிநாட்டு ஆக்கிரமிப்பிற்கும் மொழி கலாச்சார ஆதிக்கத்திற்கும் அதிகமாக உட்பட்டது போல தமிழ் மொழி பேசும் மக்கள் சமூகம் உட்பட்டதில்லை. வட இந்திய கலாச்சாரத்திற்கும் ஆதிக்கத்திற்கும் நீண்ட காலமாக தென்னிந்திய மக்கள் சமூகம் இலக்காகி மொழி கலாச்சாரம் ஆகியவற்றில் கணிச அளவில் மாறுதல் ஏற்படுத்திக் கொண்டிருந்தாலும் தமிழ் மக்கள் சமூகம் மட்டும்தான் பெருத்த மாறுதலுக்கு இலக்காகவில்லை. தன்னுடைய தனித்தன்மையைப் பாதுகாத்து வந்திருக்கிறது. குறுகிய தனித்தன்மைகளை உயர்த்திப் பிடிக்கும் நோக்கில் இதைக் குறிப்பிடவில்லை. ஒரு மக்கள் சமூகம் தனது மொழி கலாச்சாரத்தில் எவ்வளவு பின்னிப் பிணைந்திருக்கிறது என்பதன் முக்கியத்துவத்தையே குறிப்பிடுகின்றோம். தமிழ் மக்கள் சமூகத்தின் உயிராக இருந்த பெரும்பான்மை மக்களே இந்த மொழி கலாச்சாரத்தைக் காத்து வந்தவர்கள். ஏனெனில் தமிழ் மக்களின் எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டி தமிழ் மக்களைச் சுரண்டி ஆதிக்கம் செய்து வந்த தமிழ் நிலப்பிரபுத்துவ அரசர்கள்தான், பரிவாரங்கள்தான் வட இந்திய நிலப்பிரபுத்துவ கும்பலுடன் மதக் குருக்களுடன் இணைந்து கொண்டு சமஸ்கிருத மொழியையும் மதக் கலாச்சாரத்தையும் தமிழ் மக்கள் சமூகத்தை சுரண்டி ஆதிக்கம் செய்ய தொடர்ந்து பயன்படுத்தி வந்தனர். தங்களுடைய மொழியையும் கலாச்சாரத்தையும் பாதுகாக்க

தமிழ் பேசும் மக்கள் போராடி வந்துள்ளனர். தமிழ் நிலப்பிரபுத்துவ அரசுகள் சிதைந்து நிலை குலைந்த காலத்தில்தான் ஆங்கிலேயர்கள் இந்தியா முழுமையையும் அடிமைப்படுத்தியது போல் தமிழகத்தை அடிமைப்படுத்தினர். தமிழ் மக்கள் ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போராடினாலும் தமிழ் நிலபிரபுக்கள் தரகு வியாபாரிகள் தரகு முதலாளிகள் ஆங்கிலேயர்களோடு கூடிக் குலாவிக் கொண்டுதான் இருந்தனர். தமிழ் மக்களைச் சுரண்டுவதற்காக அவர்களும் கூட்டுச் சேர்ந்தே நின்றனர். சர், திவான், பகதூர் போன்ற பட்டங்களைப் பெற்றுக் கொண்டு ஆங்கில மொழி கலாச்சாரத்தில் திளைத்தனர். இவர்கள் தலைமையில்தான் 'தென்னிந்திய நலவுரிமைச் சங்கம்' நீதிக்கட்சி என வழங்கிக் கொண்டு பிரிட்டீஷாரிடம் சலுகைகள் கோரி தேச விடுதலைப் போராட்டத்திற்கு எதிராக நின்றனர்.

வட இந்திய தரகு முதலாளி நிலபிரபுக்களுக்கும் போட்டியாகத்தான் அதிகாரத்திலும் சுரண்டலிலும் பங்கு கோரினர். தென்னிந்திய நிலபிரபுத்துவ தரகு முதலாளித்துவ சக்திகள் திராவிட நாடு கோரிக்கைக்கு ஒத்துழைக்கவில்லை. ஏனெனில் தமிழ் தரகு முதலாளித்துவ நிலபிரபுத்துவச் சக்திகளின் மேலாதிக்கம் தங்களை விழுங்கிவிடும் என்பதால்தான். பின்னர் காங்கிரசில் தங்களுக்குச் செல்வாக்கு இல்லை. ஆங்கிலம் படித்த அரசு அதிகாரத்தில் நிறைந்து இருந்த பார்ப்பனர்களுக்கும் வட இந்திய சுரண்டல் வர்க்கத்திற்குத்தான் ஆதிக்கம் என்பதை அறிந்த பெரியார், தேசிய முதலாளித்துவ வலதுசாரி சக்தி, சுயமரியாதை இயக்கம், கடவுள் எதிர்ப்பு, பகுத்தறிவு இயக்கமென வளர்ந்தது. 1932ல் ரஷ்யா சென்று வந்தவர் பொதுவுடைமைக் கருத்துகளைப் பேசத் தொடங்கியவர் ஆங்கிலேய ஏகாதிபத்தியத்தின் கடும் எதிர்ப்பைக் கண்டஞ்சி பின்வாங்கி சீர்திருத்தவாதத்தில் மூழ்கினார். திராவிடநாடு கோரி 1944இல் சேலம் மாநாட்டில் பிரிட்டன் ஏகாதிபத்தியத்தின் நேரடி கட்டுப்பாட்டில் தனிநாடு கோரினார். திராவிட பாரம்பரியங்கள் பின்னாளில் தனித் தமிழ்நாடு கோரி தி.மு.க.வானது. 1963இல் நேரு பிரிவினைத் தடைச்சட்டம் கொண்டு வந்தபோது தனித்தமிழ்நாடு கோரிக்கையைக்

கைவிட்டுவிட்டு தேர்தலில் மந்திரிசபைகளில் அமர்வதோடு நின்று கொண்டது. தி.மு.க., அ.தி.மு.க யாருமே தமிழக தரகு முதலாளிகளின் நிலபிரபுக்களின் சேவகர்களாகவே ஆரம்பம் முதல் இன்று வரை இருந்து வருகின்றனர். தனிநாடு கோரிக்கையை கைவிட்டவர்கள் மாநில அரசில் உட்கார்ந்து இருந்த பொழுது தமிழ்மொழி கலாச்சாரத்தைப் பாது காக்காதவர்கள், தமிழ் மக்களின் பெரும்பான்மையோரின் நலனுக்காக ஏதும் முயலாதவர்கள் இன்று இலங்கைப் பிரச்சினை முன்வந்துள்ள போது இந்தப் பிரச்சினையை வைத்துக் கொண்டு, இன்னும் கொஞ்ச காலத்திற்கு அரசியல் பதவிகளைத் தக்க வைத்துக் கொள்ள பேயாய் அலைகின்றனர். இங்குள்ள தமிழனை 'தனிநாடு கேட்கக் கூடாது' என பிரிவினைத் தடைச்சட்டம் கொண்டு வந்த மத்திய அரசு ஈழத்தமிழரின் விடுதலைக்கு உதவும் என இந்திய ராணுவத்தை அனுப்பு என்கின்றனர். வட இந்திய முதலாளிகளுடன் நிலபிரபுக்களுடன் கூடிக் குலாவிக் கொண்டுள்ள தமிழ் தரகு முதலாளி நிலப்பிரபுக்களின் சேவகர்களே இவர்கள். தமிழ் மக்களின் எதிரிகளே இவர்கள். தமிழ்மொழி கலாச்சாரம் என்ற பெயரால் தமிழ் மக்களை ஏய்ப்பவர்களே இவர்கள்.

தனது சுதந்திரமான வளர்ச்சி தடை செய்யப்படுவதை சூறையாடப்படுவதைக் கண்டு தமிழ்த் தேசிய இனம் எழுச்சி பெற்றது. பல்வேறு முறைகளிலும் போராடியது. அதனுடைய நியாயமான போராட்டங்களையும், மொழிவெறி, இனவெறி, பிரதேச வெறி என கொச்சைப்படுத்தி இந்தி மொழி இன கலாச்சார ஆதிக்கத்தை எதிர்க்காமல் இங்கிருந்த திரிபுவாத கம்யூனிஸ்ட் தலைமை துரோகம் செய்ததால் வேறு வழியின்றி தமிழ் மக்களின் தலைமை வேறு வர்க்கங்களின் கைக்குப் போனது. தமிழ் சிறு நிலபிரபுக்களையும், சிறு முதலாளிகளையும் வலது தேசிய முதலாளிகளையும் கொண்ட திராவிட இயக்கங்களின் தலைமை தமிழினத்தைக் காட்டிக் கொடுத்தது. பேரம் பேசுவதையும், தமிழ் மக்களின் விடுதலையைத் தடுப்பதையும் குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டு வருகிறது. ஆரம்பத்தில் நாகா, மிஜோ, மணிப்புரி, காஷ்மீர் போராளிகள் எவருமே கம்யூனிஸ்ட்டல்ல. தேசிய முதலாளி

பிரிவினரே ஆயினும் அவர்கள் தன் இனம் சுதந்திரமாக வளர்வது தடை செய்யப்படுவதைக் கண்டு, உண்மையான அக்கறையோடு துப்பாக்கியுடைய எதிரியை துப்பாக்கி மூலம் மட்டுமே துரத்த முடியுமென முடிவுக்கு வந்து, ரகசிய கட்சி அமைத்து, படைகட்டி, ஆயுதப் போராட்டம் நடத்தி வருகையில் தமிழகத் திராவிடத் தலைமைகளோ, தங்களின் வர்க்க நிலைக்கேற்ப தமிழின எழுச்சியைக் காட்டி வட இந்திய தரகு முதலாளிகளுடன் பேரம் பேச வெளிப்படையான கட்சி அமைத்து தேர்தல் பாதையைப் பின்பற்றி இலங்கையின் தமிழர் விடுதலைக் கூட்டணித் தலைவர்கள் காட்டிக் கொடுப்பது போன்றே அமைதி வழி பேசி தமிழ் மக்களின் எழுச்சியை திசை திருப்பியது. தமிழீழ மக்கள் தமிழினத்தைக் காட்டிக் கொடுக்கும் அமிர்தலிங்கம் போன்ற துரோகிகளைத் தூக்கியெறிவதைப் போன்று தமிழ் மக்களும் திராவிட பாரம்பரிய துரோகக் கும்பலைத் தூக்கியெறிவர். அவர்களின் பின்னால் உள்ள தமிழ் தரகு முதலாளித்துவ நிலப்பிரபுத்துவ கும்பலையும் தூக்கியெறிவர். நீதிக்கட்சி காலம் தொடங்கி ஒரு ஏகாதிபத்தியத்தின் நேரடி அடிவருடியாய் இருக்க வேண்டும் என்று இவர்களுக்கு கனவுகள் உண்டு. ஆனால் எந்த ஏகாதிபத்தியமும் இவர்களை மதித்து தலைமையளிக்க இன்னும் தயாரில்லை என்பதே நிலை. எல்லா ஏகாதிபத்தியங்களும் இன்று வரை இந்திய ஒருமைப்பாட்டை கட்டிக் காக்கவே விழைகின்றன. எனவே இக்கும்பல்களின் ஆசை நிறைவேறாதிருக்கின்றனது. எந்த ஏகாதிபத்தியமும் இந்திய ஒருமைப்பாட்டை உடைக்க தலைமை தாங்கினாலும் அடுத்த கணமே இவர்கள் அதன் அடிவருடிகளாகி விடுவார்கள். ஏனெனில் இவர்களின் நோக்கம் தரகுத் தனிநாடே தவிர உண்மையான தமிழ்த் தேசிய இன விடுதலையல்ல.

ஆக மத்திய காலத்திலாயினுஞ் சரி, தமிழ் இன்றைய காலத்திலாயினுஞ் சரி தமிழ் மக்களுக்கும் தமிழ்மொழி இன கலாச்சாரத்திற்கும் தமிழ் மக்களிலேயே எதிரிகள் உள்ளனர். இந்த எதிரிகளைத் தூக்கியெறியாமல் வெளி எதிரிகளை வெல்ல முடியாது. எனவே, தமிழ்த் தேசிய இனத்திற்கு தமிழ் தரகு முதலாளி, நிலப்பிரபு உட்பட இந்திய தரகு முதலாளித்துவ நிலப்பிரபுத்துவ சக்திகளும்,

அமெரிக்க, ரஷ்ய ஏகாதிபத்தியங்களும் எதிரிகளே. இவர்களைத் தூக்கியெறியாமல் தமிழ்த் தேசிய இன விடுதலை என்பது சாத்தியமில்லை.

கிட்டத்தட்ட 50 ஆண்டு காலமாக தமிழ் மக்கள் தங்கள் தேசிய பண்பை பாதுகாக்கும் இயக்க நடைமுறை இருப்பதாலும், இலங்கைத் தமிழர்களின் பிரச்சினை தீரும் வரை தமிழ் மக்கள் மத்தியில் தங்கள் தேசிய மொழி கலாச்சாரத்தை பாதுகாக்கும் உணர்வுகள் அதிகரிக்கவே செய்யும் என்பதாலும், பொதுவாக இன்றைய உலக சூழலிலும் இந்தியாவின் குறிப்பான சூழ்நிலைகளினாலும் தேசிய இன விடுதலைப் போராட்டங்களுக்கு பாட்டாளி வர்க்கம் தலைமை ஏற்க வேண்டுவது அவசியம் என உணர்வதாலும் தமிழ்த் தேசிய இன விடுதலை போராட்டத்தை முன்னெடுக்கிறோம் என்பதை அறிவிக்கிறோம். பிற தேசிய இனங்களின் இந்தி தேசிய இனம் உட்பட விடுதலைப் போராட்டங்களையும் முன்னெடுக்கிறோம் என்பதையும் அறிவிக்கிறோம். தோழர் ஏங்கல்ஸ் ஜெர்மனியில் விவசாயிகளின் போராட்டத்தைப் பற்றிக் கூறுகையில் விவசாயிகள் பிரச்சினை என்பது முதலாளித்துவ பிரச்சினை என விவரிக்கிறார். ஆனால் திரிபுவாதிகளோ விவசாயிகள் பிரச்சினை மட்டும் பாட்டாளி வர்க்கப் பிரச்சினையாகவும், தேசிய இனப் பிரச்சினையை முதலாளித்துவ பிரச்சினையாகவும் சொல்லி தொடர்ந்து இந்திய ஆளும் வர்க்கங்களுக்கும், அந்நிய ஏகாதிபத்தியங்களுக்கும் பயன்படும் ஒருமைப்பாட்டை கட்டிக் காத்து சேவை செய்து வருகின்றனர். ஆனால் நம்மைப் பொருத்தவரையில் தேசிய இனவிடுதலை பிரச்சினை மட்டுமல்ல, விவசாயிகள் பிரச்சினை, ஜனநாயக உரிமை பிரச்சினை, தேச விடுதலை அனைத்துமே முதலாளித்துவ அம்சமுடையதே. பாட்டாளி வர்க்கம் ஒடுக்கப்பட்ட சகல வர்க்கங்களுக்கும் தலைமையளித்தாக வேண்டிய கட்டாய தேவையில் இன்றிருப்பதால் முதலாளித்துவ அம்சமுடைய உழவர் புரட்சிக்கு தலைமையளிப்பது போல தேசிய இன விடுதலைக்கும் தலைமையளிப்போம். உழவர் புரட்சியுடன் தேசிய இன விடுதலையை ஒன்றிணைப்போம். இந்தியாவை

விடுவிப்போம். முதலாளித்துவத் தலைமையிலான தேசிய இன விடுதலை என்பது என்றும் தனிநாடு நோக்கமுடையது. ஆனால் பாட்டாளி தலைமையிலான தேசிய இன விடுதலை என்பது தனிநாடு வடிவமே எடுத்தாலும் கூட எதிர்காலத்தில் சர்வதேச நிலைக்கு போகக் கூடியது.

★ **உழவர் புரட்சி நடத்துவது என்ற பெயரில் தேசீய இன விடுதலைக்கு குழி பறிப்போரையும், தேசீய இன விடுதலையை சாதிப்பது என்ற பெயரில் உழவர் புரட்சிக்கு குழி பறிப்போரையும் முறியடிப்போம்.**

★ **ஒன்றை மற்றதற்கு எதிராக நிறுத்துவது எதிர் புரட்சிகர செயலே. ஒன்றிணைத்து விடுதலையடைவதே இந்திய மக்களின் இன்றைய தேவை. தேசீய இன விடுதலைக்கும் இந்திய தரகு முதலாளித்துவ, நிலபிரபுத்துவ வர்க்கங்களே அந்நிய ரஷ்ய அமெரிக்க வல்லரசுகளே எதிரிகள்.**

★ **தேசீய இன விடுதலை யுத்தங்கள் இந்திய ஜனநாயக புரட்சியின் தனித்தன்மையும் அதன் உள்ளடக்கங்களில் அடங்கியதுமாகும். அதற்கும் தலைமையளிக்க வேண்டியது பாட்டாளி வர்க்கத்தின் கடமையாகும்.**

★ **இந்திய அரசை தகர்த்தெறிவது இந்திய மக்களின் தெற்காசிய மக்களின் உடனடி தேவை. புதிய ஜனநாயக இந்தியாவை சாதிப்பது உழைக்கும் மக்களின் முதல் தேவை. இந்திய அரசை பலவீனப்படுத்தும் அனைத்து போராட்டங்களையும் ஆதரிப்போம். ஜனநாயக கம்யூனிச சக்திகள் நடத்தும் நாகா, மிசோ, மணிபுரி, காஷ்மீர், தனிநாடு கோரிக்கைகளையும் ஆதரிப்போம். அத் தனிநாடு கோரிக்கைகளை அங்கீகரிக்கக் கோரி மத்திய அரசை எதிர்த்து போராடுவோம். நாகா, மிசோ, மணிபுரி, அஸ்ஸாம், பஞ்சாபி பகுதிகளிலிருந்து இந்திய ராணுவத்தை வெளியேறும்படி கோரி இந்திய அரசை எதிர்த்துப் போராடுவோம்.**

★ **பிரிவினை தடைச்சட்டத்தை ரத்து செய்யும் படியும், தேசீய இனங்களுக்கு சுயநிர்ணய உரிமை வழங்கும்படியும் கோரி போராடுவோம்.**

* இந்தி ஒன்று மட்டுமே இந்தியாவின் ஆட்சி மொழி யென்னும் சட்டத்தை இந்திய அடிமை (அரசியல்) சட்டத்திலிருந்து நீக்கப் போராடுவோம். கர்நாடகம், அந்தமான் பிறமாநிலங்களிலே வாழும் தமிழர்களின் கல்வி உரிமையை சாதிக்கப் போராடுவோம்.
* தேசீய இனங்களின் மீதான ஒடுக்குமுறையை எதிர்த்து சம உரிமைகளைச் சாதிப்போம். தேசீய இன கொள்ளையைத் தடுப்போம்.

**இந்திய மக்களின் உழவர் புரட்சி ஓங்குக!**

**இந்திய தேசீய இனங்களின் இன விடுதலை வெல்க!**

**தமிழின விடுதலை மலர்க!**


நடைபெற்ற
தமிழீழ விடுதலை ஆதரவு
மாநாடு
இந்தியாவின் தேசீய
இனங்களின் விடுதலை மாநாடு
அறிக்கைகள்
முற்போக்கு இளைஞர் அணி